



# பெ.ராம. குடும்பத் திருப்பணிகள்

1-7-79-ல்
நிகழ்ந்த
திருக்குட
நன்னீராட்டு
நினைவு மலர்.



உ
சிவமயம்

# பெ. ராம. குடும்பத் திருப்பணிகள்

திருக்கொள்ளம்புதூர்
அருள்தரு. சௌந்தரநாயகி அம்பாள் சமேத
ஸ்ரீவில்வாரண்யேஸ்வரர் திருக்கோயில்

## 1-7-79ல் நிகழ்ந்த திருக்குட நன்னீராட்டு விழா நினைவு மலர்



ஆக்கியோர்:
L. சோமு
சித. நடராசன்

வெளியீடு ஆண்டு 1979

# உள்ளுறை விளக்கம்

ஓ

சிவமயம்

ஸ்ரீ பொய்யாத விநாயக மூர்த்தி துணை

# பதிப்புரை



தமிழகத்தின் கலைச்செல்வமாகத் திகழ்வன நம் திருக்கோயில்கள், ''மன்னர் பின்னோர்'' என்ற மொழிக்கேற்ப மூவேந்தர் எடுத்த கலைக்-கோயில்களுக்கும் செய்த திருப்பணிகளுக்கும் அடுத்தபடியாக ஷி கோயில் களைப் பராமரித்தும், புதியன ஆக்கியும் பழையன புதுப்பித்தும் நிறைவு கண்டவர்கள் தன வைசியர்களான நகரத்தார் பெருமக்களே ஆகும். அப்பெருமைக்கேற்ப எங்கள் ஐயா திரு. பெ. ராம. ராமன் செட்டியார் அவர்களும் பெ. ராம. லெட்சுமணன் செட்டியார் அவர்களும் ஸ்ரீ பொய்யாத விநாயகர் ஆலயம் ஒன்றினைக் கட்டியும் திருக்கொள்ளம்-புதூர் ஸ்ரீ சௌந்தர நாயகி சமேத ஸ்ரீவில்வவனநாதர் கோயிலைக் கல் திருப்பணி செய்தும் அவ்வவற்றிற்கேற்ப அறக்கட்டளைகள் குறிப்பிட்டு, குடும்ப சாசுவத தர்மம் ஒன்றினை நிறுவியும் சிறந்துள்ளார்கள்.

அவர்களின் திருப்பணிகள் குறித்தும் அவர்கள் வழிவந்த வம்சா வளியினர் குறித்தும் நிரந்தரமான குறிப்புகளுடன் விவரங்கள் அடங்கிய விரிவான நினைவுமலர் ஒன்றை வெளியிட வேண்டும் என்பது எங்களின் நீண்ட நாள் அவா! அண்மையில் கடந்த ஜூலை மாதம் 1 உ (1-7-79) கொள்ளம்புதூர்க் கோயில் திருக்குட நீராட்டு விழா பெ.ராம. குடும்பத் தினரால் முழுவதும் எங்கள சொந்த பொருட் செலவிலேயே நிறைவேற்றி வைக்கப்பட்டது. எனவே திருவருள் துணைக் கூட்ட அதனையொட்டி "பெ. ராம. குடும்பத் திருப்பணிகள்'' என்ற பெயரில் இம் மலரினையும் வெளிக்கொணரும் எங்கள் விருப்பம் நிறைவேறும் வாய்ப்புப் பெற்றது. 1979-ம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 17-ம் நாளில் நிகழும் மண்டலா-பிஷேகத்தின் போது இந்த திருப்பணிகள் நினைவு மலரை வெளியிடுவதில் பெரும் மகிழ்ச்சி அடைகின்றோம்.

திருக்கொள்ளம்புதூர்க் கோயில் கோபுரம் மற்றும் மராமத்துப் பணிகளை விரைந்து 9 மாத காலத்தில் சிறப்பாக நிறைவேற்றிக் கொடுத்த

மதுரை திரு. ST. மாரியப்ப ஸ்தபதியார் திரு. கார்த்திகேய ஸ்தபதியார் ஆகியோர்க்கு எங்கள் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

திருக்குட நன்னீராட்டு விழாவிற்குத் திருக்கொள்ளம்புதூர் பெரு மக்கள் காட்டிய ஆர்வத்திற்கும் நல்கிய ஒத்துழைப்பிற்கும் எங்கள் நன்றி. செல்லூர் ஸ்ரீ. ராகவ ஐயங்கார், ஸ்ரீ கோபி ஐயங்கார் அவர்களுக்கும் எங்கள் நன்றி. கட்டுரைகள் அனுப்பிய திரு. சோம லெ. திரு லெ. அருணாசலம் செட்டியார் திருமதி நிர்மலாமோகன் அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியது. திருக்குட நன்னீராட்டு தினத்தன்று நடந்த அபிஷேகங்களுக்கு ரூ. 1200 பொருளுதவி செய்த பசுமடம் வெ.அ.வயி அண. குடும்பத்திற்கும் சுவாமி எழுந்தருளச் செய்வதற்கு ரூ. 100 நன் கொடை தந்த உயர்திரு "ரவீந்திரன்" அவர்களுக்கும், எங்களுடன் கோவில் திருப்பணி வேலைகளில், முழு ஒத்துழைப்பு தந்த கர்ணம் P. நட ராஜ முதலியார் அவர்களுக்கும் எங்களிடமும் ஸ்ரீ சௌந்தர நாயகிசமேத வில்வாரண்யேஸ்வரரிடமும் என்றும் அன்புடன் பணியாற்றி ரூ. 5000 வரை பொருளுதவி செய்த சின்ன ஐயா A. தியாகராஜ முதலியார் அவர் களுக்கும் யாகசாலைக்கு வந்திருந்த சிவாச்சாரியார்கள் அனைவருக்கும் மிகச்சிறப்பாக விருந்தளித்த நாலரை மணி சுவாமிநாத ஐயர் குடும்பத் திற்கும் நன்றி. வாழ்த்துக் கவிதைகள் எழுதித்தந்த கோவை பேராசிரியர் காராளன் திரு. சொ. அரியநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றி.

மேலும் இம்மலர் குறுகிய காலத்தில் நிறைந்த வேலைப்பாட்டுடன் செம்மையாக அச்சிட்டு வெளிவரப் பெரிதும் உறுதுணையாக இருந்து சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த கோவை மயில் அச்சகம் திரு. PR. லெட்சுமணன் அவர்களுக்கும், தேவகோட்டை அபிராமி அச்சகத்தார்க்கும் எங்கள் நன்றி என்றும் உரியன.

மேலும் இம்மலருக்குக் கட்டுரைகள் விளம்பரங்கள் தந்துதவி யோர்க்கும் எங்கள் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இன்னணம்

நச்சாந்துபட்டி
17—8—79

பெ.ராம. குடும்பத்தினர்

## விநாயகர் காப்பு

நலம்புரி யியற்றமிழ் நாவின் மல்கவும்
பொலம்புரி யிறைக்கரும் பொருளை யெய்தவும்
சிலம்புரி யடியரை யாளுந் தேவருண்
வலம்புரிப் பிள்ளையை வணங்கி வாழ்த்துவாம்



மோதகப் பிரியன் வாகனம் மீது அமர்ந்து
காணும் முதல் நிலைக்கோபுரம்
பின்னே காண்பது பொய்யாத வினாயகர்
மேல் விமானத் தோற்றம்



பெ. ராம. திருப்பணி விடுதி
பெ. ராம. பேர் சொல்லியே நிற்கும்
சீரார் இராம இலக்குமர் எடுத்த திரு இல்லம்
விருந்துண்டு சென்றோரும் விழாநாளில்
(தீபாவளி ஓடோத்சவம்)
கண்டு களித்து இருந்தாரும்
எண்ணில் அடங்கா எண்ணி முடியா!
இன்றும் உண்டு இவ்விழா, விருந்து அனைத்தும்!
வருக! வருக! என்றே வரவேற்று நிற்கும்
வனப்புறு இல்லம்



கலையழகுமிக்க தெற்குக் கோபுர வாயிலின்
பின்பக்கத் தோற்றம்

உ
சிவமயம்

திருக்கொள்ளம்பூதூர்

# கோவில் வரலாறு

" ஆறு வந்தணையுங் கொள்ளம்பூதூர்
ஏறு தாங்கிய இறைவனை யுள்கச்
செல்ல உந்துக சிந்தையார் தொழ
நல்கு மாறருள் நம்பனே" (சம்பந்தர்)

" சோம லெ "

## 1. கோவிலும், இருப்பிடமும்

எப்போதும் வற்ருத நீர்ப்பெருக்கையுடைய காவிரி நதி பாயும் சோழ நாடு. இதற்கு சென்னி நாடு, செம்பியர் நாடு, பொன்னி நாடு முதலிய பெயர்கள் வழங்கும். "சோழ நாடு சோறுடைத்து" என்னும் பழமொழியைப் பெற்றது.

தஞ்சாவூர் மாவட்டம், நன்னிலம் வட்டத்தில் தஞ்சாவூர்-நாகூர் புகைவண்டி மார்க்கத்தில் கொரடாச்சேரி ரயில் நிலையத்திலிருந்து வடக்கே செல்லூர் மார்க்கமாக 4-வது மைலில் இத்தலம் அமைந்துள்ளது. கொரடாச்சேரி-கும்பகோணம் பஸ் மார்க்கமாகச் செல்லூரில் இறங்கி இத்தலத்தை அடையலாம். கும்பகோணம் ரயில் நிலையத்திலிருந்து தெற்கில் 22-வது மைலில் இக்கோயில் உள்ளது. செல்லூரிலிருந்து திருக்கொள்ளம்பூதூர் சுமார் அரை மைல் தூரமிருக்கும்; மண் பாதை வழி. பெ. ராம. குடும்பத்தார்க்கு சொந்தமான விடுதி ஒன்று உள்ளது. ஊருக்கு மேற்கில் வெட்டாறு ஓடுகின்றது. புராணத்தில் இது முள்ளியாறு என்றும், அகத்திய காவேரி என்றும் சொல்லப்படும். ஆற்றிற்கு அக்கரையில் நம்பர் கோயில் என்னும் திருஞானசம்பந்தர் கோயில் உள்ளது. இதனை உயர்திரு பெ.ராம.ராம.லெ. லெட்சுமணன் செட்டியார் அவர்களும் உயர்திரு. பெ. ராம. ராம. சித சிதம்பரம் செட்டியார் அவர்களும் அழகுற அமைத்து ஈசுவர ஆண்டு ஆனித் திங்கள் 8-ம் நாள் கும்பாபிஷேகம் சிறப்பாக நடத்தி வைத்தார்கள். இவ்வூருக்குக் கிழக்கில் திருவாரூரும், தெற்கில் திருப்பூவனூரும், மேற்கில் ஆலங்குடியும், வடக்கில் திருக்குடவாயிலும் (குடவாசல்) சூழ்ந்துள்ளன.

வேறு பெயர்கள்: இத்தலத்திற்கு வில்வவனம், பிரமவனம் பஞ்சாக்கரபுரம், காண்டீபவனம் என்னும் பெயர்கள் ஒவ்வோர் யுகத்திற்கு ஓர் பெயராய் வழங்கி வந்ததாகச் சொல்லப்படுகிறது.

கோயிலின் அமைப்பு: ஆற்றின் சோலைகளை அடுத்து ஊருக்கு நடுவில் கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கோயில் அழகான கோயில். திருப்பணி செய்யப்பெற்றது. கோயிலுக்கு உள்ளே இரண்டு பிரகாரங்களும், வெளியில் ஒரு வீதியும் உள்ளன. கோயிலுக்கு முன் பிரமதீர்த்தம் என்னும் திருக்குளம் உள்ளது. முன்வாயிலுக்கு கோபுரம் இல்லை. வாயிலின் இருபுறமும் விநாயகர் சந்நிதிகள் உள்ளன. இதற்கு உட்புறம் வசந்த மண்டபம் உள்ளது. இதில் தற்போது தேவஸ்தான காரியாலயம் உள்ளது. இரண்டாம் பிராகாரத்தைச் சுற்றிலும் பூந் தோட்டங்கள் உள்ளன. முன்பு சோழர் காலத்தில் அருள்மிகு சௌந்தர நாயகி அம்பாள் மண்டபம் இருந்த இடம்.

1930-ம் ஆண்டு திருப்பணி செய்யப் பெறும்போது தரைமட்ட மாய் இடிக்கப்பட்டு நந்தவனமாய் இருந்துவந்தது.

அக்காலத்தில் சௌந்தரநாயகி அம்பாள் ஆட்சி செலுத்திய அதே இடத்தில் சௌந்தர மகாலட்சுமி கோயில் உருவாக்க பெரும் விருப்பம் கொண்டு பெ ராம குடும்ப மகளிர் உபயமாக புதிதாக சௌந்தர மகாலட்சுமி கோயில் ஒன்று உருவாக்கப்பெற்று 1979-ம் ஆண்டு ஜூலை மாதம் 1-ந் தேதி திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது. உள் கோபுர வாயில் 5 நிலைகளைக் கொண்டது. இருபக்கங்களிலும் பொய்யாத விநாயகர் தண்டபாணி சந்நிதிகள் உள்ளன. உள் பிராகாரத்தில் தென் புறத்தில் மடைப்பள்ளியும், நால்வர் சந்நிதியும் ஆதி வில்வ மாமும், மேல் புற வரிசையில் வலம்புரி விநாயகர், சோமாஸ்கந்தர், கஜமுகத்தீஸ்வரர் பஞ்சலிங்கம், முருகப்பெருமான், மகாலட்சுமி முதலிய தெய்வங்களின் சந்நிதிகளும், வடபுறத்தில் பைரவர் சந்நிதியும், பள்ளியறையும், கிழக்கில் கருவூல அறையும், நவக்கிரகங்களும் உள்ளன. நடுமண்டபத்தில் மூலவர் கிழக்கு நோக்கியுள்ளார். மகா மண்டபத்தில் பல உற்சவ மூர்த்திகளும் நடராஜர் சந்நிதியும் உள்ளன. பக்கத்தில் அம்மன் சந்நிதி தெற்கு நோக்கி உள்ளது. அம்மன் சந்நிதி மண்டபத்தில் கோயில் திருப்பணி செய்த பெ. ராம. ராமன் செட்டியார், சாத்தம்மை ஆச்சியார், பெ. ராம. லெட்சுமணன் செட்டியார் ஆகியவர்களின் உருவச் சிலைகள் தூண்களில் பொருத்தப்பட்டுள்ளன. சுவாமி கோயிலுக்கு வடக்கில் கிணறும், சண்டிகேஸ்வரர் கோயிலும் உள்ளன. வெளி மதிலுக்கு தெற்கிலும் மேற்கிலும் வாயில்கள் உள்ளன. கோயிலுக்கு வெளியே தெற்கு வீதியில் பசுமடம் உள்ளது. லெ. அ. வயி. அண்ணாமலை செட்டியார் அவர்களுக்கு சொந்தமான பசுமடம் ஒன்று உள்ளது. அங்கு இருந்து ஆறு காலமும் திருக்கோவிலுக்கு பால் அனுப்பப்பெறுகிறது. கோயிலுக்கு நேர் வீதியில் பெ. ராம. குடும்பத்திற்கு சொந்தமான விடுதி யும் பள்ளிக் கூடமும், இருபுறமும் வீடுகளும் அமைந்துள்ளன. மேற்கில் வெட்டாறு என்னும் முள்ளியாறு ஓடுகிறது. அக்கரையில் நம்பர் கோயில் என்னும் திருஞான சம்பந்தர் வந்து தங்கிய இடம். தவத்திற்குரிய மரம் வில்வம். பிராகாரங்களில் சில வில்வ மரங்கள் உள்ளன. கோயில் தூய்மையாகவும், சிற்பப் பொலிவுடனும் விளங்குகிறது. கோயிலின் சுற்றளவு கிழமேலடி 459 தென்வடலடி 231.

மூர்த்தங்களின் பெயர்கள் : இக்கோயிலின் விநாயகருக்கு வலம்புரி விநாயகர் என்னும் பெயர் வழங்கி வருகிறது. வலப்பக்கம் சுழித்திருப்பதாலும் வலம்பெற எழுதலாலும் இப்பெயர் அமைந்தது.

''வலம்பெற எழுதலான் மருப்போன்றவர்க்கு நிலைம்புகழ்
வலம்புரி என்று நீள்பெயர் நலம்பெற வானது.'' (தலபுராணம்)

மூலவருக்கு வில்வாரண்யேஸ்வரர்-வில்வவனநாதர் என்றும், அம்மனுக்கு சௌந்தரநாயகி-அழகுநாச்சியார் என்றும் பெயர்கள் வழங்குகின்றன. கல்வெட்டுக்களில் பெருமானுக்குத் திருக்கொள்ளம்பூதூர் உடையார் என்றும், அம்மனுக்கு அழகிய நாச்சியார் என்றும் பெயர்கள் வழங்கப்பட்டுள்ளன. ஆற்றுக்கு அக்கரையில் உள்ள நம்பர் கோயிலில் நம்பர் என்பது திருஞானசம்பந்தரைக் குறிக்கும். கோயிலுக்குள் மேற்புறம் உள்ள பல திருவுருவங்களில் சிலந்திச் சோழன்-கோச்செங்கட்சோழனைக் குறிக்கும். மற்ற மூர்த்திகளின் பெயர்கள் படத்தில் காட்டப்பெற்றுள்ளன.

## தீர்த்தங்கள்

இக்கோயிலில் முக்கியமாக நான்கு தீர்த்தங்கள் உள்ளன.

1. பிரம தீர்த்தம் : கோயிலுக்கு முன்னேயுள்ள திருக்குளம் ஆகும். பிரமன் பெயரால் ஏற்பட்டது. தை மாதம் வெள்ளிக்கிழமைகளில் இதில் நீராடி வழிபட்டால் செல்வம் அனைத்தும் சேரும். நன்மைகளைப் பெறுவர்.

''பூச மாசந் தனில்வெள்ளிக் கிழமை போந்த நாட்டன்னில்
ஆசில் பிரம தீர்த்தத்தி னுடிற்செல்வ மனைத்தும்வரும்''
(தலபுராணம்)

2. அர்ச்சுன தீர்த்தம் : இது கோயிலுக்கு வடபால் உள்ளது அர்ச்சுனன் பெயரால் ஏற்பட்டது. பங்குனி மாதம் பூரணை நாளில் நீராடி வழிபட்டால் வேண்டும் சித்திகளைப் பெறுவர்.

3. அகத்திய தீர்த்தம் : கோயிலுக்கு வடக்கில் உள்ளது. அகஸ்தியர் பெயரால் ஏற்பட்டது. கார்த்திகை மாதம் சோம வார நாட்களில் இதில் நீராடித் திருவைந்தெழுத்தைச் செபித்து வழிபட்டால் பிரமகத்தி முதலிய பாவங்கள் நீங்கும். பல நலன்களை அடைவர்.

4. வெட்டாறு : இது முள்ளியாறு என்றும், அகத்திய காவேரி என்றும் சொல்லப்படும். கோயிலுக்கு மேற்கில் ஓடுவது திருஞான சம்பந்தர் பதிகம்பாடி ஓடஞ் செலுத்தியது. துலா மாதத்தில் அமாவாசை உதித்த முதல் பாதத்தில் நீராடி வழிபட்டால் வேண்டும் சித்திகளையும், வலிமையையும் பெறுவர். இது ஓடம்போக்கி ஆறு எனவும் வழங்கும். நகர வாழ்க்கையில் மன அமைதி பெறமுடியாமல் அல்லற்படும் மக்களுக்கு

மன அமைதியை உண்டாக்கும் இடம். பல கல்வெட்டுகளையுடையது. சுவாமி விபுலானந்தர் அவர்கள் தாம் பலகாலம் ஆராய்ந்து வெளியிட்ட யாழ் நூலை உயர்திரு பெ.ராம.ராம.சித. சிதம்பரம்செட்டியார் முன்னேற்பாட்டிலும் செலவிலும் அரங்கேற்றிய இடம். திருஞானசம்பந்தர் இத்தலத்திற்குவந்து அடியார்களை ஓடத்திலேற்றி நாவலமே கோலாகப் பதிகம் பாடி முள்ளி யாற்றைக் கடந்து பெருமானை தரிசித்து பேறு பெற்ற இடம்.

திருஞானசம்பந்தர் தமது தேவாரப் பதிகத்தில் இந்த திருக்கொள்ளம்பூதூரின் இயற்கை வளங்களை அழகாகக் காட்டியுள்ளார்.

இத்தலம் மணம் கமழ்ந்திடும் மாண்பினது. கோட்டகக் கழனி களால் சூழப்பெற்றது. குலைகள் செறிந்த தென்னை மரங்கள் நிறையப் பெற்றது. குவளை மலர்கள், கண்களைப்போல் மலர்வது. பொன்நிறம் போன்ற கொன்றை மலர்கள் சொரியப் பெற்றது. ஓடம் வந்தணையப் பெற்றது. ஆறு வந்தணையப்பெற்றது. குரங்குக் கூட்டங்கள் பயிலும்படி யான சோலை வளமும் பருத்த வரால் மீன்கள் துள்ளும்படியான நீர் வளமுமுடையது. நீர்வளம் மிகுந்த வயல்களைக் கொண்டது. இத்தகைய வளமான பதியில் பெருமான் கோயில் கொண்டுள்ளான்.

**திருப்பணி :** முற்காலத்தில் நம் தமிழ் வேந்தர்கள் தமது அரசியல் வெற்றிக்கும் நல்வாழ்வுக்கும் உயிருக்குயிராய் உள்நின்று உதவிய இறைவனது திருவருளில் முழு நம்பிக்கையுடையவர்களாய்த் தம் நாட்டில் வாழும் எல்லா மக்களும் தெய்வக் கொள்கையில் தெளிவுடைய உள்ளமுடையவர்களாய் இம்மை மறுமை இன்பங்களைப் பெற்று உய்தல் வேண்டுமென்னும் பெருநோக்கத்துடன் ஊர்தோறும் வானளாவ உயர்ந்த திருக்கோயில்களைக் கட்டியதுடன், அவற்றின் நாள் வழிபாட்டிற்கு வேண்டிய நிபந்தங்களையும் குறைவற வழங்கியுள்ளார் கள். இவ்வாறு முற்காலத்தில் நம் அரசர்களாற் போற்றிப் பாதுகாக்கப் பெற்ற திருக்கோயில்கள், நம் நாடு அயலாற்கு அடிமையுற்ற நிலையிற் போற்றுவாரின்றிச் சிதைவுறும் நிலையை எய்துவனவாயின. இந்நிலையில் நம் நாட்டு மக்களுக்குத் தெய்வ வழிபாட்டிலும், தேவாரம், திருவாசகம் முதலிய அருள் நூல்களிலும் பேரார்வம் ஏற்படும் வண்ணம் நம் முன்னோர் செய்த திருக்கோயில்களின் திருப்பணிகளை இக்காலத்திலும் தொடர்ந்து நிறைவேற்றிய தனிச் சிறப்பு செட்டிநாட்டு நகரத்தார்களாகிய தனவணிகச் செல்வர்களுக்கே உரியதாகும்.

செந்தமிழ் நாட்டு வணிகப் பெருமக்களாகிய இவர்கள் கடல் கடந்து வெளிநாடுகளுக்குச் சென்று தாம் அரிதில் தேடிய பொருளிற் பெரும் பகுதியைப் பொது வாழ்வுக்குப் பயன்படுத்த வேண்டும் என்ற பரந்த நோக்கத்துடன் சைவமும் தமிழும் வளரத் திருக்கோயில்

திருப்பணிகளுக்கும், கல்வி வளர்ச்சி முதலிய நற்பணிகளுக்கும் செலவிட்டு வருவதனை யாவரும் உணர்வர். பூம்புகார் வணிகர் எனப் போற்றப் பெறும் இவர்கள், சைவத் திருமுறைகளில் தமக்கு இயல்பாக அமைந்த ஆர்வத்தின் பயனாகத் தமிழ்நாட்டிலுள்ள தேவாரப் பாடல்பெற்ற திருக் கோயில்களுக்கு, சிறப்பாகச் சோழ நாட்டிலுள்ள திருக்கோயில்கள் பலவற்றுக்குக் கோடிக்கணக்கான பொருளைச் செலவிட்டுச் சிறந்த முறையில் பல திருப்பணிகளைச் செய்துள்ளார்கள். திருக்கோயிலின் நாள் வழிபாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தும், திருக்கோயிலின் அங்கங்களாகிய தேவாரப் பாடசாலை, வேத பாடசாலை, பசுமடம் என்பவற்றை அமைத்தும் நம் சமயவாழ்வுக்கு இன்றியமையாத பெருந் தொண்டுகளைப் புரிந்துள்ளார்கள்.

இவ்வகையில் இத் திருக்கொள்ளம்பூதூர்த் திருப்பணியை மேற்கொண்டவர்கள் நச்சாந்துபட்டி பெ. ராம. இராமன் செட்டியார், பெ. ராம. லெட்சுமணன் செட்டியார் குடும்பத்தினராவர்.

இவர்கள் இத்தகைய தெய்வத் திருப்பணி சம்பந்தமாக இருபத் தைந்து லட்சம் ரூபாய்களுக்கு மேல் செலவிட்டுள்ளார்கள். ஞானத்தின் திருவுருவாகிய திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமது நாவலமே கோலாகக் கொண்டு முள்ளியாற்றில் ஓடம் செலுத்தத் திருவருள் புரிந்த பெருமான் திருக்கொள்ளம்பூதூரில் எழுந்தருளிய சிவபெருமானாதலின், நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தர்க்கு உதவிய இவ்வூர்ப் பெருமானிடத்திலும் இங்கு அருளுருவாய் எழுந்தருளிய சௌந்தரநாயகி இடத்திலும் (அழகிய நாச்சியாரிடத்திலும்) இக்குடும்பத்தினருக்கு அளவிலாத ஆர்வம் ஏற்பட்டமை பொருத்தமுடையதே. இத்தகைய ஆர்வத்தால் நச்சாந்துபட்டி பெ. ராம. இராமன் செட்டியாரும், பெ. ராம. லெட்சுமணன் செட்டியாரும் அவர்தம் குடும்பத்தினரும் திருக்கொள்ளம்பூதூர்த் திருக்கோயில் முழுவதையும் கருங்கல் திருப்பணியாக அழகுற அமைக்க எண்ணினார்கள். 1930ஆம் ஆண்டில் தொடங்கிய இத் திருப்பணி சுமார் எழுநூறாயிரம் ரூபாய் செலவில் ஏழாண்டுகளில் இனிது நிறைவேறியது கல் திருப்பணி வேலைகள் அனைத்தையும் பெ. ரு. ராமன் செட்டியார், பெ. ரு. லெட்சுமணன் செட்டியார், பெ. ரு. ரு. ராமன் செட்டியார், பெ. ரு ரு. லெ. லட்சுமணன் செட்டியார், பெ. ரு. ரு. சித. சிதம்பரம் செட்டியார், பெ. ரு. லெ. சேதுச் செட்டியார் ஆகியோர்களும் முன் நின்று மேற்பார்வையில் உருவாக்கினார்கள். ஈசுவர ஆண்டு ஆனி மாதம் 14ஆம் நாள் (27—6—37) ஞாயிற்றுக்கிழமை இத் திருக்கோயிலின் மஹா கும்பாபிஷேகம் தமிழகமே மறக்கமுடியாத அளவு மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதன் சார்பில் நிகழ்ந்த சைவ சமயப் பேரவையில் செந்தமிழ்ப் பெரும் புலவர்களும் அன்புமிக்க அடியார்களும் கலந்து கொண்டமை குறிப்பிடத்தக்கதாகும். பெ. ராம. குடும்பத்தினரால் இவ்வூரில் பசு மடத்திற்கு மேற்புறம் அழகிய நந்தவனம் ஒன்று அமைக்கப்பெற்றுள்ளது. இங்கிருந்து எடுக்கப்பெறும் நறுமலர்கள்

மாலைகளாகத் தொடுக்கப்பெற்று வில்வவனநாதருக்கும் சௌந்தரநாயகி (அழகிய நாச்சியார்)க்கும் காலந்தோறும் அணியப்பெறுகின்றன. ஐப்பசி மாதம் தீபாவளிக்கும் அதற்கு அடுத்தநாள் நடக்கும் ஓட உற்சவத்திற்கும் வரும் ஜனங்களுக்கு சௌகர்யமாக தங்குவதற்கு இத் திருப்பணிக் குடும்பத்தார் கோயிலுக்கு நேர் வீதியில் ஓர் பெரிய விடுதியும், அதைச் சேர்ந்தாற்போல் சிறிய விடுதி ஒன்றும் அமைத்துள்ளார்கள். வருஷா வருஷம் உற்சவத்திற்கு வரும் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பொதுமக்கள் இவ்விடுதியில் தங்கி ஆனந்தமாய் தீபாவளி கொண்டாடி, உணவு அருந்தி மகிழ்ந்து இன்புறுகிறார்கள். சுவாமி தரிசனத்திற்கு வரும் மக்களுக்கு எப்பொழுதும் உபயோகப்படும் வகையில் இவ்விடுதியில் நிரந்தரமாக ஆட்கள்வைத்து எல்லா வசதிகளையும் பெ. ராம.குடும்பத்தார் செய்து வருவது மிகவும் போற்றத்தக்கது. பெ. ராம. குடும்பத்தார் பள்ளியறை கட்டளையையும் தங்கள் செலவில் இன்றும் செய்து வருகிறார்கள்.

கோயிலில் நாள் வழிபாடும், திருவிழாக்களும் சிறப்பாக நிகழும் வகையில் பெ. ராம. குடும்பத்தார் தமது சொந்தச் செலவில் கோயில் நிலங்களைச் சீர்திருத்தி இத்திருக்கோயிலின் வருமானத்தைப் பெருக்கியுள்ளார்கள். இதன்கண் மின்சார விளக்குகள் அமைத்தும், கோயில் எப்பொழுதும் தூய்மையாக விளங்கும் முறையிற் பணியாளர்களைக் கண்காணித்தும் இத்திருக் கோயிலை நாளும் அழகுற விளங்கச் செய்துள்ளார்கள். இத் திருக்கோயில் திருப்பணியினைக் குறித்துத் தமிழ்நாட்டிலும் கடல்கடந்த வெளிநாட்டிலுமுள்ள தமிழ்மக்கள் நன்கு உணர்வார்கள். சர்வசித்து வைகாசி 22, 23 ( 5, 6-6-47 )ஆம் நாட்களில் இத்திருக்கோயிலில் ஆளுடைய பிள்ளையார் திருமுன்னிலையில் நிகழ்ந்த யாழ்நூல் அரங்கேற்று விழா தமிழிலக்கிய வரலாற்றில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாகும். இன்றும் பெ. ராம. குடும்பத்தார்களே வாரிசு பரம்பரையாக இக்கோயிலின் நிர்வாகத்தை நன்முறையிலே நடத்தி வருவது மிகவும் பாராட்டத் தக்கது ஆகும்.

## 8. கோவிலின் அமைப்பு

| | |
|---|---|
| 1. முன் வாயில் | 8. கிணறுகள் |
| 2. கற்பக விநாயகர் | 9. மடைப்பள்ளி |
| 3. சித்தி விநாயகர் | 10. நால்வர் |
| 4. வசந்த மண்டபம் (ஆபீஸ்) சௌந்தர மஹாலெட்சுமி கோயில் | 11. ஆதி வில்வமரம் |
| | 12. வலம்புரி விநாயகர் |
| 5. கோபுர வாயில் 5 நிலைகள் | 13. சோமாஸ்கந்தர் |
| 6. பொய்யாத விநாயகர் | 14. கஜமுத்தீஸ்வரர் |
| 7. தண்டபாணி | 15. பஞ்சலிங்கம் |

| | | | |
|---|---|---|---|
| 16. | மகாலிங்கம், கணபதி,ஐயனர், | 24. | மூலவர் வாயில் |
| 17. | முருகப்பெருமான் (சோழன் | 25. | நடராஜர் |
| 18. | மகாலெட்சுமி | 26. | மகாமண்டபம்- உற்சவமூர்த்திகள் |
| 19. | பைரவர் | | |
| 20. | பள்ளியறை | 27. | மூலவர் - வில்வவனநாதர் |
| 21. | கருவூலம் - சாமான் அறை | 28. | திருக்குளம் - பிரமதீர்த்தம் |
| 22. | நவக்கிரகம் | 29. | தெற்கு வாயில் |
| 23. | அம்மன் சந்நிதி-சௌந்தரநாயகி | 30. | மேற்கு வாயில் |

9. சிற்பங்கள்: கோயிலும், கோபுரமும், மண்டபங்களும், தூண்களும் சிற்பத் திறனில் சிறந்து விளங்குகின்றன. உள் கோபுரம் 5 நிலைகளைக் கொண்டுள்ளது. தூண்களில் பல சிற்பங்கள் 'அமைக்கப் பட்டுள்ளன. ஒரு தூணில் திருஞானசம்பந்தர் ஓடம் விடும் காட்சி தீட்டப் பெற்றுள்ளது. முருகப்பெருமான் திருவுருவில் முருகன் ஒரு கையை மயிலின் தலைமேல் வைத்து, ஒரு காலைத் தூக்கி வைத்திருப்பது போல சிற்பம் அமைக்கப் பெற்றுள்ளது. அம்மன் கோயில் முன்மண்டபத்தில் மேல் விட்டத்தில் மேடம், இடபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் ஆகிய பன்னிரண்டு ராசிகளின் சிற்பங்கள் அழகாய் அமைக்கப்பெற்றுள்ளன. அம்மன் கோயில் மண்டபத் தூண்களுக்கருகில், திருப்பணி செய்த குடும்பத்தார்களான நச்சாந்துப்பட்டி பெ. ராம. ராமன் செட்டியார், டி ராமன் செட்டியாரின் மனைவி சாத்தம்மையார், பெ. ராம. லெட்சுமணன் செட்டியார் ஆகியோருடைய உருவங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. கோயிலுக்கு முன்புறமுள்ள திருக்குளம் அழகாகக் கட்டப்பெற்றுள்ளது. கோபுரத்தில் அழகான வர்ணச் சிற்பங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. கோபுரத்தின் உச்சியிலும் பிற இடங்களிலும் நீல மின் விளக்குகள் பொருத்தப் பெற்றுள்ளன.

10. நாள் வழிபாடும், திருவிழாக்களும்: கோயில்களில் பூஜை முதலியன நடைபெருமல் முட்டுப்பாடு ஏற்பட்டால் நாட்டுக்குத் தீமை உண்டாகும் என்பர்.

'' கண்ணுதற் பெருமான் மேய கோயிலிற் காலந்தோறும்
நண்ணுநற் பூசை யாதி விதிப்படி நடத்தல் வேண்டும்
பண்ணுதல் தவறுமாயின் பார்த்திபன் தனக்கும் பாரில்
அண்ணுபல் லுயிர்க்கும் தீமை அணுகுதல் சரதமாமே.''

*(மகாவித்துவான் - மீனுட்சிசுந்தரம்பிள்ளை)*

இக் கோயிலில் தினந்தோறும் ஆறு காலங்களில் அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன. திருவனந்தல் காலை 6 மணிக்கும், காலைப் பூஜை 8-30 மணிக்கும், உச்சிப் பூஜை 11 மணிக்கும், மாலை

வழிபாடு 6 மணிக்கும், 2-ம் காலம் 7-30 மணிக்கும், அர்த்தசாமப் பூஜை 9 மணிக்கும் நடைபெறுகின்றன. பூஜை நேரங்களில் பெரிய மணி அடிக்கப்படும். அந்தந்த காலங்களில் சென்று வழிபடுவதால் மிக்க புண்ணியம் உண்டு.

" காலைதொழ அற்றைவினைக் கட்டகலும் கட்டுச்சி
வேளைதொழ இப்பிறப்பில் வெந்துயர்போம் - மாலையினில்
வந்து சிவன்தாளை வந்திக்கில் எழ்பிறப்பின்
வெந்துயர மெல்லாம் விடும் " (சிவதரிசன மகத்துவம்)

மேலும் பிரதோட காலத்தில் கோயிலுக்குச் சென்று வழிபடுவதால் மிக்க நன்மை உண்டென்பர். பிரதோடமாவது வளர்பிறையிலும், தேய்பிறையிலும் வரும் திரயோதசி நாளில் சூரியன் மறைவதற்கு முன்னுள்ள மூன்றேமுக்கால் நாழிகையும், பின்னுள்ள அதே நேரமுங் கொண்ட காலமுமாகும். சிவபெருமான் ஆலகால விஷத்தை உண்டருளிய நேரம் என்பர்.

" வாழிய இருபக் கத்தும் வளர்திர யோத சிக்கண்
ஆழியிற் கதிரோன் வீழும் அதற்குமுன் மூன்றே முக்கால்
நாழிகை பின்னுமந்த நாழிகை இளைய காலம்
பாழியங் கடல்சூழ் வைப்போர் பகர்பிர தோட மென்பார் "

" இன்னபுண் ணியகா லத்தில் எய்துபு தரிசிப்போர்கள்
முன்னர்வெம் பாவத்தாய முருக்குவன் பிணிநி ரப்போடு
என்னபொல் லாங்குத் தீர்வர் இன்பமும் திருவும் பெற்றுப்
பின்னர்நம் பெருமான் பாதம் பிரிவறக் கலந்து வாழ்வார் "

(தனியூர்ப் புராணம்)

ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் பிரம்ம உற்சவம்-பெருவிழா நடைபெறுவது வழக்கம். தற்போது நடைபெறுவதில்லை. ஆனால் மாத விழாக்கள் - ஏறுபடிகள் மட்டும் நடைபெறுகின்றன. மாதந்தோறும் கார்த்திகை - பிரதோட நாட்களில் சுவாமி புறப்படும். சித்திரை - பௌர்ணமி நாளில் பஞ்சமூர்த்திகளும் புறப்படும். ஆடிப்பூர நாளில் உள்ளே அம்மன் புறப்படும். ஆவணி மாதம் விநாயக சதுர்த்தி நாளில் ( கஜமுகாசூரனை வதைத்த நாள் ) விநாயகர் புறப்பாடு நிகழும். புரட்டாசி மாதம் நவராத்திரி விழாவில் அம்மன் கொலுவிருக்கும். விஜயதசமி நாளில் சுவாமி புறப்பட்டு அம்பு போடும். ஐப்பசி மாதம் அமாவாசை நாளில் முதல் பாதத்தில் சந்திரசேகரரும் கங்கையம்மனும்

வெட்டாற்றிற்குச் சென்று தீர்த்தங் கொடுப்பர். மறுநாள் ஓடத்திருநாள் அன்றைக்குத் திருஞானசம்பந்தர் காலையில் கோயிலிலிருந்து பல்லக்கில் புறப்பட்டு வெட்டாற்றின்மேல் கரைக்கு எழுந்தருளுவார். இரவில் திருஞான சம்பந்தர் அடியார்களுடன் முள்ளி ஆற்றில் ஓடம் விடும் காட்சியும், திருக்கோயிலின் மேல வாயிலில் சம்பந்தருக்குச் சிவபெருமான் ரிஷப வாகனத்தில் காட்சியளிக்கும் விழாவும் நடைபெறும். இதுவே இக்கோயிலின் முக்கிய திருவிழாவாகும். கந்தர் சஷ்டி நாளில் சுப்பிரமணியர் புறப்பட்டுச் சூரசம்மாரம் நடைபெறும். கார்த்திகை மாதம் சோமவார நாளில் சுவாமி புறப்பட்டுத் திருவாசல் குளத்தில் தீர்த்தங் கொடுக்கும். கார்த்திகை நாளில் சொக்கப்பானை கொளுத்தப்பெறும். மார்கழி மாதம் விடியற்காலையில் தனுர் மாதப்பூஜையும், திருவெம்பாவை -திருப்பள்ளி எழுச்சி பாடல்களின் ஒலிபரப்பும் நிகழும். திருவெம்பாவை-பள்ளியெழுச்சி பாடற்போட்டியில் வெற்றிபெற்றவர்களுக்குப் புத்தகங்களும் பதக்கங்களும் பரிசளிக்கப்படும். திருவாதிரை நாளில் நடராஜர் எழுந்தருளுவார். மாணிக்கவாசகர் உற்சவம் 9 நாட்கள் நடைபெறும். நால்வர்களுக்கு அபிஷேக ஆராதனைகள் நிகழும். தைப்பூச நாளில் பஞ்சமூர்த்திகளுக்கு அபிஷேகமும், இரவில் சுப்ரமணியர் புறப்பாடும் நிகழும். மாசி மாதம் மகாசிவராத்திரி நாளில் இரவில் நான்கு காலங்களிலும் அபிஷேக ஆராதனைகள் நிகழும். சந்திரசேகரர் திருவீதிக்கு எழுந்தருளுவார். மக நாளில் சந்திரசேகரர் உள்ளே பிராகாரத்தில் திருவுலா எழுந்தருளுவார். பங்குனி உத்தர நாளில் சுப்பிரமணியர் பிராகாரத்தினுள் எழுந்தருளுவார்.

'' மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணி னல்அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தம். ''

என்னும் பெரியபுராணப் பாடலின்படி மனிதராய்ப் பிறந்தவர் அனைவரும், பெருமானுக்கு நடைபெறும் திருவிழாக்களைக் கண்டும், மூர்த்திகளைத் தரிசித்தும் பெருமான் திருவருளைப் பெறுவார்களாக.

11. வருமானமும் சொத்துக்களும் : இக்கோயிலுக்குச் சுமார் 200 ஏக்கர் நன்செய் நிலங்களும், 175 ஏக்கர் புன்செய் நிலங்களும் உள்ளன. இவைகள் திருக்கொள்ளம்பூதூர், செல்லூர், பொன்னூர், தண்டலை, அபிவிருத்தீஸ்வரம், கிளியூர், புரச்சாத்தாங்குடி, சாரநத்தம் முதலிய கிராமங்களில் உள்ளன. நிலங்களின் குத்தகையின் மூலமாய் ஆண்டுதோறும் சுமார் முப்பதாயிரம் ரூபாய் வருமானம் வரும். அரசியலார் மோகினித் தொகையாக ரூ. 52-50 கொடுக்கிறார்கள். பள்ளியறைக் கட்டளைக்காகத் திருப்பணிக் குடும்பத்தார் ஆண்டுதோறும் ஐந்நூறு ரூபாய் உபயமாகக் கொடுத்து வருகிறார்கள்.

பிரமன் இங்கு வழிபட்டு ஐந்தெழுத்து உபதேசம் பெற்றார்.
அகத்திய முனிவர், இங்கு நீராடி இறைவனை வழிபட்டார்.
அர்ச்சுனன் தவம் செய்தார்.
வேடன் முத்தி பெற்றார்.

திருஞானசம்பந்தர் ஓடஞ்செலுத்தியது : பரசமய கோளரியாகிய திருஞான சம்பந்தர் பாண்டிநாட்டிற்குச் சென்று சமணசமய இருளிற் கிடந்து வருந்திய பாண்டியன் முதலிய பல்லாயிரவரை மீட்டுச் சைவ சமயத்தினுட்படுத்தி மீண்டும் சோழநாட்டை நோக்கித் திருப்பாசுாளீச்சரம் முதலிய பல தலங்களையும் தரிசித்துத் திருக்கொள்ளம் பூதூராகிய இத்தலத்தை நோக்கி வரும்போது முள்ளியாற்றங்கரையை அடைந்தார். இது ஓடம்போக்கி ஆறு என்றும், வெட்டாறு என்றும், அகத்திய நதி என்றும் சொல்லப்படும். சம்பந்தர் தங்கிய இடம் நம்பர் கோயில் என வழங்கப்பெறுகிறது. ஆற்றின் வெள்ளம் சந்தனம், அகில், தேக்கு முதலிய மரங்களையும் பல மலர்களையும் உந்திக்கொண்டு வந்ததால், ஓடக்காரர்கள் ஓடங்களைச் செலுத்த முடியாமல் ஓடங்களைக் கரையில் நிறுத்திச் சென்றனர். சம்பந்தர் திருக்கொள்ளம்பூதூர்ப் பெருமானைத் தரிசிக்க எண்ணிக் கரையில் கட்டியிருந்த ஓடத்தை அவிழ்த்து ஓடத்தில் அடியார்களுடன் தாமும் ஏறித் தமது நாவின் வலிமையை ஓடக்கோலாகக் கொண்டு "கொட்டமே கமழும்" என்ற பதிகம் பாடினார். பெருமான் அருளால் ஓடம் அக்கரையில் வந்து சேர்ந்தது. சிவபெருமான் இடப வாகனத்தில் தேவியுடன் காட்சி கொடுத்தருள எல்லோரும் தரிசித்தார்கள். பின்பு சம்பந்தர் அடியார் களுடன் திருக்கோயில் வாயிலுக்கு சென்று கோபுரத்தை வணங்கி உட்சென்று வலம் வந்து பெருமானுடைய சந்நிதியில் "தாணுவே! ஆற்றின் இடையே ஓடத்தைச் செலுத்தித் தந்தருளிய தலைவரே! நாகப்பூணினாய், யானையின் தோலைப் போர்த்தமுக்கண்ணனே" என்று போற்றிப் பணிந்து புறம்போந்து இப்பதியில் தங்கியிருந்தார்.

இந்த ஓடத்திருவிழா ஆண்டுதோறும் ஐப்பசி மாதத்தில் அமாவாசைக்கு மறுநாளில் நிகழும். அன்றைக்குத் திருஞானசம்பந்தர் அடியார்களுடன் முள்ளியாற்றில் ஓடம் விடும் காட்சியும், மேல்வாயிலில் சிவபெருமான் ரிஷப வாகனத்தில் தரிசனங்கொடுக்கும் காட்சியும் நடைபெறும்.

திருஞானசம்பந்தர் அடியார்களைத் தோணியில் ஏற்றிக்கொண்டு முள்ளி ஆற்றின் கரையிலிருந்து பதிகம் பாடி அக்கரைக்குச் சென்று பெருமானைத் தரிசித்து வணங்கி, அடியார்களையும் தரிசிக்கச் செய்தார். அதுபோல திருஞானசம்பந்தருடைய ஞானத் தமிழ் பாடல்கள், பிறவி என்னும் பெருங்கடலை நீந்தி இறைவன் திருவடியாகிய நெடுங்கரையில் - அக்கரையில் கொண்டு சேர்க்கும் தோணியாகும் என்று கூறுவர்.

# 15. இலக்கியப் பாடல்கள்

திருஞானசம்பந்தர் பாடிய தேவாரம் (பண்-காந்தார பஞ்சமம்)

திருச்சிற்றம்பலம்.

கொட்டமே கமழுங் கொள்ளம்பூதூர்
நட்டமாடிய நம்பனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ளம்பனே:

கோட்டகக் கழனி கொள்ளம்பூதூர்
நாட்டகத் துறை நம்பனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ளம்பனே.

குலையினர் தெங்குசூழ் கொள்ளம்பூதூர்
விலையிலாட் கொண்ட விகிர்தனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ளம்பனே.

குவளை கண்மலருங் கொள்ளம்பூதூர்
தவள நீறணி தலைவனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ளம்பனே.

கொன்றைப் பொன்சொரியுங் கொள்ளம்பூதூர்
நின்ற புன்சடை நிமலனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ளம்பனே.

ஓடம் வந்தணையுங் கொள்ளம்பூதூர்
ஆடல் பேணி யடிகளை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ளம்பனே.

ஆறு வந்தணையுங் கொள்ளம்பூதூர்
ஏறு தாங்கிய இறைவனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ளம்பனே.

குரக்கினம் பயிலுங் கொள்ளம்பூதூர்
அரக்கனைச்செற்ற ஆதியை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே.

பருவரா லுகளுங் கொள்ளம்பூதூர்
இருவர் காண்பரியான் கழலுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே.

நீரகக் கழனிக் கொள்ளம்பூதூர்
தேரமண் செற்ற செல்வனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறரு ணம்பனே.

கொன்றைசேர் சடையான் கொள்ளம்பூதூர்
நன்று காழியுள் ஞானசம்பந்தன்
இன்று சொன்மாலை கொண்டேத்த வல்லார்போய்
என்றும் வானவ ரோடிருப்பாரே.

## திருநாவுக்கரசர் பாடிய திருத்தாண்டகம்

மங்குல் மதிதவழும் மாடவீதி
மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார்
கொங்கிற் கொடுமுடியார் குற்றாலத்தார்
குடமூக்கி லுள்ளார் போய்க் கொள்ளம்பூதூர்த்
தங்கு மிடமறியார் சால நாளார்
தரும புரத்துள்ளார் தக்க ளூரார்
பொங்கு வெண்ணீறணிந்து பூதம் சூழப்
புலியூர்ச் திருச்சிற்றம்பலமே புக்கார் தாமே.

இடைமரு தீங்கோ யிராமேச் சுரம்
இன்னம்பர் எரிடவை ஏமப் பேறூர்
சடைமுடி சாலைக்குடி தக்களூர்
தலையாலங் காடு தலைச்சங் காடு
கொடுமுடி குற்றாலங் கொள்ளம்பூதூர்
கோத்திட்டை கோட்டாறு கோட்டுக்காடு
கடைமுடி கானூர் கடம்பந் துறை
கயிலாய நாதனையே காணலாமே.

## பதினோராம் திருமுறைப் பாடல்கள்

அணங்கமர் யாழ்முரித் தாண்பனை பெண்பனை யாக்கிஅமண்
கணங்கழு வேற்றிக் கடுவிடந் தீர்த்துக் கதவடைத்துப்
பிணங்கலை நீர்எதிர் ஓடஞ் செலுத்தின வெண்பிறையோ
டிணங்கிய மாடச் சிரபுரத் தான்றன் இருந்தமிழே.

அள்ளற் பழனக் கொள்ளம்பூதூர்
இக்கரை ஓடம் அக்கரைச் செலவே (நினைந்து)

கொள்ளம்பூ தூர்க்குமுகன் நாவாய் அதுகொடுப்ப
உள்ளமே கோலாக ஊன்றினன்.

(நம்பியாண்டார் நம்பி)

திருஞானசம்பந்தர் இத் தலத்துக்கு வந்து ஓடம்விட்டுப்
பெருமானைத் தரிசித்த வரலாற்றைக் குறிக்கும்

## பெரியபுராணப் பாடல்கள்

பொன்னிவளந் தருநாடு புகுந்து மிக்க
பொருவில்சீர்த் திருத்தொண்டர் குழாத்தி னோடும்
பன்னகப்பூண் அணிந்தவர்தங் கோவில் தோறும்
பத்தருடன் பதியுள்ளோர் போற்றச் சென்று
கன்னிமதில் திருக்களரும் போற்றிக் கண்டங்
கரையணிந்தார் பாதாளீச் சுரமும் பாடி
முன்னணைந்த பதிபிறவும் பணிந்து போற்றி
முள்ளிவாய்க் கரையணைந்தார் முந்நூல் மார்பர்.

மலைவளர்சந் தனமகிலுந் தேக்கு முந்தி
மலர்ப்பிறங்கல் வண்டிரைப்பச் சுமந்து பொங்கி
யலைபெருகி யாளியங்கா வண்ணமாறு
பெருகுதலா லத்துறையி லணையு மோட
நிலைபுரிய மோடக்கோ னிலையி லாமை
நீர்வாழ்நர் கரையின்க ணிறுத்திப் போகக்
கலைபயிலுங் கவுணியர்கோ னதனைக் கண்டக்
கரையின்க ணெழுத்தருளி நின்ற காலை.

தேவர்பிரா னமர்ந்ததிருக் கொள்ளம் பூதூ
ரெதிர்தோன்றத் திருவுள்ளம் பணியச் சென்று
மேவுதலா லோடங்கள் விடுவா ரின்றி
யொழிந்திடவு மிக்கதோர் விரைவர் சண்பைக்

காவலறு ரோடத்தின் கட்டவிழ்த்துக்
கண்ணுதலான் திருத்தொண்டர் தம்மையேற்றி
''நாவலமே கோலாக'' வதன்மே னின்று
நம்பர் தமைக் ''கொட்டமே'' நவின்று பாட.

உம்பருய்ய நஞ்சுண்டா ரருளா லோடஞ்
செலச்செல்ல வுந்துதலா லூடு சென்று
செம்பொனேர் சடையார்தங் கொள்ளம் பூதூர்
தனைச்சேர வக்கரையிற் சேர்ந்த பின்பு

நம்பரவர் தமைவணங்கி ஞான முண்ட
பிள்ளையார் நற்றொண்ட ருடனி ழிந்து
வம்பலரு நறுங்கொன்றை நயந்தார் கோயில்
வாயிலின்முன் மகிழ்ச்சியோடு வந்து சார்ந்தார்.

நீணிலக்கோ புரமதனை இறைஞ்சிப் புக்கு
நிகரிலாத் தொண்டருடன் நெருங்கச் சென்று
வானிலவு கோயிலினை வலங்கொண் டெய்தி
மதிச்சடையார் திருமுன்பு வணங்கி நின்று

'' தாணுவே ! ஆற்றின்கண் ஓடம் உய்க்குந்
தன்மையால் அருள்தந்த தலைவா! நாகப்
பூணினாய் ! களிற்றுரிவை போர்த்த முக்கட்
புனிதனே!'' எனப்பணிந்து போற்றி செய்தார்.

## சிவநாமப் பல்தொடை வெண்பா.

கொள்ளம்பூ தூர்மேவுங் கோலச் சவுந்தரிசேர்
வள்ளலே வில்வ வனேசுரா -

## திருக்கொள்ளம்பூதூர்ப் புராணம் - வலம்புரி விநாயகர்

நலம்புரி யியற்றமிழ் நாவில் மல்கவும்
பொலம்புரி யிறைக்கரும் பொருளை யெய்தவும்
சிலம்புரி யடியரை யாளுந் தேவருண்
வலம்புரிப் பிள்ளையை வணங்கி வாழ்த்துவாம்.

## வில்வவனேசர்

சீர்கொண்ட ஒருகோடிப் பரிதியென ஒளிவிரிக்குஞ்
செவ்வி யானைப்
பார்கொண்ட மணிச்சுடிகைப் பன்னகப்பொற் பணியானைப்
பசுந்தேன் பில்கும்
தார்கொண்ட தண்டுளபத் திருமாலுஞ் சதுர்முகனும்
தாழ்ந்து போற்றக்
கார்கொண்ட முகத்தானை வில்வவனப் பெருமானைக்
கருத்துள் வைப்பாம்

## சௌந்தரநாயகி

இருளனைய கருங்குழலும் இளநிலவார் வெண்ணகையும்
எழிற்செவ் வாயும்
கருணைபொழி திருமுகமும் கணைவிழியும் பணைத்தோளும்
கமலக் கையும்
பொருவரிய தனதடமும் புவனமெலாம் பரவிருதாட்
புண்ட ரீக
அருள்மலரும் அழகியநம் அழகியநா யகியைநினைந்
தகத்துள் வைப்பாம்.

## முருகப்பிரான்.

வந்தனை புரிந்து போற்று மகபதிக் கடல்வெஞ் சூரச்
சந்தனை நீக்கிக் கொற்றத் தையலைப புணரும்பைவேற்
கந்தனைத் தெய்வ யானைக் காந்தனை பிறவி யென்னும்
பந்தனை நீக்கும் வெட்சிப் பதத்தனைத் துதித்தல் செய்வாம்.

## நடராஜர் (ஆடல்வல்லார்)

குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற் குமிழ்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே.
(திருநாவுக்கரசர்)

## திருக்கொள்ளம்பூதூர், வைத்திலிங்க முதலியார் இயற்றிய போற்றிக் கலிவெண்பா.

1. சீர்பூத்த தெய்வத் திருமாலின் உந்திவந்தோன்
பார்பூத்த லிங்கத்திற் பக்திசெயக் - கார்பூத்து
2. வந்தருளிச் செய்து மனமுவந்த பல்வரங்கள்
தந்தருளிச் செய்த திருத் தாள்போற்றிச் - சிந்தித்தே
3. தஞ்சமெனக் கும்பமுனி சார்ந்நுதாட் பூசைசெய
அஞ்செழுத்தைக் கூறும் அருள்போற்றி.

## வெண்ணிலாக் கண்ணி

1. வில்வவன மேவுநாதர் வெண்ணிலாவே - எங்கள்
விமலர்தமை ஏத்துவம்வா வெண்ணிலாவே
2. நம்பர்பதம் அபயமென வெண்ணிலாவே - நீதான்
நண்ணியுற்ற நலமறிந்தோம் வெண்ணிலாவே
3. நாட்டுக்கெலாம் நம்பனென வெண்ணிலாவே - அந்த
நம்பனுறை கொள்ளம்பூதூர் வெண்ணிலாவே.

## வாழ்த்து

சீர்கொள் சைவஞ் செலுத்திடத் திங்கள்மும்
மாரி பெய்ய மனுநெறி மல்கிட
வீர வெண்மதி சூடும் இறைவர் தாள்
சாரு நேய அடியார் தழைக்கவே.

ஸ்ரீ விஸ்வவனநாதர் மலரடி போற்றி.

## கல்வெட்டுக்களின் விபரங்கள்

1899 1, 2, எண்ணுள்ள இரண்டு கல்வெட்டுக்கள் எடுக்கப் பட்டன. இவ்விரண்டும் ஆரும் தொகுதியில் 436, 437 என்னும் எண்களில் வெளிவந்துள்ளன.

## 1917-ம் ஆண்டறிக்கை

250 முதல் 255 முடிய ஆறு கல் வெட்டுக்கள் எடுக்கப்பட்டன. இவை இன்னும் வெளிவரவில்லை.

250 மூன்றும் ராசராசன் 7-ம் ஆண்டுக் கல்வெட்டு (கி.பி.1223)

அம்பர்கிழான் அரையன் அருவந்தையாகிய சுவேதனப் பெருமாள் காலிங்கராயன் அருமொழிதேவவளநாட்டுச் சேற்றூர்க் கூற்றத்துத் திருக்கொள்ளம்பூதூர்த் திருக்கோயிலிலிருந்து சில நிலங்களைப் பெற்று அவற்றுக்குப் பதிலாக வேறு நிலங்கள் அளித்த செய்தியைக் கூறுகிறது.

251 மூன்றும் ராசராசன் இருபதாம் ஆண்டு (கி.பி. 1236) கோயில் வழிபாட்டுக்குச் சில நிலங்களிலிருந்து நெல்லளக்கும்படி செய்த உத்தரவு இதன்கண் ராஜராஜேஸ்வரமுடையார், அபிமுக்தேஸ்வரநல்லூர் இவ்விரு பெயர் காணப்படுகின்றன.

252 மதுரையும் பாண்டியன் முடித்தலையுங் கொண்ட குலோத்துங்க சோழரின் III 16-ம் ஆண்டு (1194) கல்வெட்டு சுங்கந் தவிர்த்த முதற்குலோத்துங்கனது 29-ம் ஆட்சியாண்டில் (1099) இக்கோயில் வழிபாட்டுக்கு நிபந்தங்கள் விட்ட செய்தி கூறுவது.

253 மூன்றும் ராசராசன்.

அம்பர்கிழான் அரையன் அருவந்தை சுவேதனப் பெருமாளான காலிங்கராயன் கோயிலுக்கு நிலம் விட்ட செய்தி தெரிவிப்பது.

254 மூன்றுங் குலோத்துங்க சோழன் ஆட்சியில் திருநீலகண்டத்துப் பாணனர் மதங்க சூளாமணியார் திருவுருவங்களை எழுந்தருளுவித்த வழிபாட்டுக்கு நிலம்விட்டது.

255 பெருமுருடையான் சங்கன் ஆகிய அமரகோன் எழுந்தருளுவித்தது. நீறளித்த மென்முலை நாச்சியார், குழகாண்ட மாதேவர், ஆட்டம் பேணிய அழகர் அவரது அம்பிகை ஆட்கொண்ட நாயக தேவர் அவரது அம்பிகை அபிமுக்தீஸ்வரமுடையார் அவரது அம்பிகை ஆகிய மூர்த்திகளுக்கு நாள் வழிபாட்டுக்கு நிவந்தம் விட்ட செய்தி பேசும்.



## பெ. ராம. இராமன் செட்டியார்

**தோற்றம்:** *1876* **மறைவு:** *1934*

*ஆலயங்கள் பலகட்டி அழியாத தர்மங்கள்*
*சீலமுடன் செய்வித்த சீர்மையனின் தாள்போற்றி*
*குன்றெனவே செல்வம் குவித்துத் தலைமுறைக்கும்*
*நின்றுபுகழ் நிலைபெறச்செய் நீர்மையனின் தாள்போற்றி!*



**சாத்தம்மை ஆச்சி**

தேசமெலாம் புகழும் தெய்வத் திருவுருவாய்
வீசு புகழோங்கி வேந்தர் எனத்திகழ்ந்த
ஒரச்சில் வார்த்தெடுத்த உயர்பொற் சிலைகளெனப்
பேர்பெற்ற மும்மணிகள் பெற்றெடுத்த மாதரசி



**பெ. ராம. இலக்குமணன் செட்டியார்**

*இலக்கிய ராமனின் இளவலே போற்றி!*
*ஒழுக்கம் நிறைந்த உத்தம போற்றி!*
*அண்ணனே தெய்வமாய் அன்புடன் இதயத்து*
*எண்ணிய புண்ணிய! பாதம் போற்றி!*



பெ. ராம. ராம. ராம. இராமநாதன் செட்டியார்
alias காசிச் செட்டியார்

*சிவமாய்ப் பழமாய்ச் சிறந்தாய் போற்றி!*
*நவமாய்க் கனிவாய் நடப்பாய் போற்றி!*
*சீலம் நிறைந்த செம்மலே போற்றி!*
*நாளும் உன்பாதம் பணிவோம் போற்றி'*



**பெ. ராம. ராம. லெ. லெட்சுமணன் செட்டியார்**
**வள்ளியம்மை ஆச்சி**

*பொய்யாத வினையகனின் பொற்கழலை மனதிருத்தி*
*செய்யும் செயலிலெல்லாம் சிவப்பழமாய்த் தான்திகழ்ந்து*
*தெய்வமே உருக்கொண்டு வந்ததுபோல் வாழ்ந்தஎங்கள்*
*தெய்வமே! நின்கமலத் திருப்பாதம் போற்றி! போற்றி!*



**பெ. ராம. ராம. சித. சிதம்பரம் செட்டியார்**
**மீனுட்சி ஆச்சி**

புலமை நிறைந்த புண்ணிய போற்றி!
புலவர்க் கெல்லாம் புரவல போற்றி!
இளமைத் தமிழில் இனிய 'யாழ்நூல்'
வெளிவரச் செய்த வள்ளலே போற்றி!
வள்ளலின் எண்ணம் வடிவாய் மலர
சொல்லிய வண்ணம் நின்ருய் மீனுட்சி போற்றி!



பெ. ராம. லெ. இராமநாதன் செட்டியார்
alias சேதுச் செட்டியார்

தோற்றம்: 26—11—1910 மறைவு: 14—10—1969

நன்றே எண்ணி நன்றே செய்வாய்!
நன்றும் ஒன்றும் அன்றே செய்வாய்!
என்றும் பணிகள் இனிதே முடிப்பாய்!
நன்றுன் பாதம் பணிந்தோம் போற்றி!



அன்னபூரணி ஆச்சி

பெண்ணிற் பெருந்தக்க யாவுள என்று
பேர் சொல்லவே வாழ்ந்து வாழ்வரசியானாய்
எண்ணிய வண்ணம் வாழ்ந்தாய் போற்றி
திண்ணிய மனத்தினாய் அன்னபூரணி போற்றி

உ

சிவமயம்

# பெ. ராம: குடும்ப சாசுவத தர்மம்

எஸ். லெட்சுமணன்

பெ. ராம. குடும்ப சாஸ்வத தர்மத்தின்கீழ் பேரையூர் அம்பாள் குளம் என்னும் தர்மத்தூரணி ஸ்ரீ பொய்யாத விநயகப் பெருமானுக்கு நித்தியப்படி பூஜை, வழிபாடு, அபிஷேகம், ஆராதனை முதலியவைகள் நடந்து வருவதுடன் திருக்கொள்ளம்புதூர் ஸ்ரீ வில்வாரண்யேஸ்வரர் சௌந்தர நாயகி அம்பாள் அர்த்தஜாமக் கட்டளைகள், ஷ நந்தவனம் பராமரிப்பு, மலையக்கோயில் ஐந்தாம் மண்டகப்படி, நால்வர் குருபூஜை மற்றும் கார்த்திகைச் சோமவாரம் முதலியன முறையாக நடத்தப்பட்டு வருகின்றன. அவற்றின் பட்டியல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் பேரையூர் பிள்ளையார் கோயில் விடுதியில் விநயக சதுர்த்தி வைபவத்திற்கும் பங்குனி மாதம் நிகழும் தேரோட்டத்திற்கும் வரும் அனைவருக்கும் விருந்தளிக்கப்பட்டு வருகிறது.

பேரையூர் நாகநாத சுவாமி கோயிலின் சுரங்கத்தில் கண்டெடுக்கப்பட்ட பெரும் தேர் வடச்சங்கிலிக்கு ஏற்றதாக சுவாமி தேர், அம்பாள் தேர் ஆக இரண்டும் பெ. ராம. செலவில் சித்திர வேலைபாடுகள் நிறைந்துள்ளதாக செய்துவைக்கப் பட்டுள்ளது. ஆண்டுதோறும் அவர்கள் செலவில் தேரோட்டம் நடத்தி வைக்கப்படுகிறது.

டி பெ. ராம. குடும்பத்தார்களால் ராமன் செட்டியார், லெட்சுமணன் செட்டியார் காலத்தி லிருந்து இன்றளவும் நடந்து வரும் தர்மங்கள் அறக்கட்டளைகள்.

சித்திரை மாதம் : நல்லிப்பட்டியில் சித்ரா பௌர்ணமி அன்று காலே திருமயத்தில் இருந்துவரும் பெருமாள் எதிர்சேவை, வரவேற்பு, மண்டகப்படி.

சித்திரை மாதம் சதய நட்சத்திரத்தில் அப்பர் குருபூஜை மலேயக்கோவிலில் பெ. ராம. மடத்தில்

வைகாசி மாதம் : மூல நட்சத்திரம் ஞான சம்பந்தர் குரு பூஜை மலேயக் கோவிலில் பெ. ராம. மடத்தில்

ஆனி மாதம் : மக நட்சத்திரம் மாணிக்கவாசகர் குரு பூஜை மலேயக்கோவில் பெ.ராம. மடத்தில்

ஆடி மாதம் : சுவாதி நட்சத்திரம் ஆலால சுந்தரர் குரு பூஜை மலேயக்கோவில் பெ.ராம. மடத்தில்

''சித்திரைச் சதயம் அப்பர் சிறந்த நல்
வைகாசி மூலத்தில் ஞானசம்பந்தர்;
அந்தஆனி
மா மகத்தில் வாதவூர் கத்தமாம்
சோதி நன்னுளில் சுந்தரர் என்று சொல்''

ஒவ்வொரு குருபூஜையிலும் மலேயக் கோவிலில் எல்லா தெய்வங்களுக்கும் அபிசேக அலங்கார ஆராதனேகள், குன்றின் மேல் கோயில் கொண்டிருக்கும் குமரனுக்கும் அபிடேக அலங்கார ஆராதனேகள் செய்யப்பட்டு பெ. ராம. மடத்திலும் குருபூஜை நடந்து, வடித்துப் போடப்படுகிறது.

ஆவணி மாதம் : பேரையூர் தர்மத்தூரணி ஸ்ரீ பொய்யாத விநாயகர் சதுர்த்தி, விநாயகர் எழுந்து அருளுதல்; திரு உலா; அபிடேகம் அலங்காரம் ஆராதனே; இன்னிசை கச்சேரிகள் இன்னும் பல.

| | | |
|---|---|---|
| புரட்டாசி மாதம் | : | ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் திருக்கொள்ளம்புதூரில் ராமாயணமும், நச்சாந்துபட்டியில் இரண்டு ஆண்டுக்கு ஒருமுறை ராமாயணமும் படித்து விழாக் கொண்டாடப்படுகிறது. |
| ஐப்பசி மாதம் | : | தீபாவளிக்கு மலையக்கோவில், கோட்டூர் பிள்ளையார் கோவில் எல்லா தெய்வங்களுக்கும் கோடி; உருப்படிகள்; திருக்கொள்ளம்புதூர் ஸ்ரீ சௌந்தர நாயகி அம்பாள் சமேத ஸ்ரீ வில்வாரேஸ்வர ஸ்வாமி; ஞானசம்பந்தப் பெருமானுக்கு காட்சி கொடுத்தல்; ஓடோத்ஸ்வ வைபவம். மேற்படிக்கு தீபாவளி அமாவாசை 3 நாட்களுக்கு திருக்கொள்ளம்புதூர் பெ. ராம. விடுதியில் சாப்பாடு விருந்து முதலியன. |
| கார்த்திகை மாதம் | : | மலையக்கோவில் முதல் சோம வாரம் நச்சாந்துபட்டி சிவன் கோவில் 4 வது சோம வாரம். |
| தை மாதம் | : | தைபூச 5ம் மண்டகப்படி மலையக்கோவில் |
| மாசி மாதம் | : | பேரையூர் நாகநாத சுவாமி சிவராத்திரி |
| பங்குனி மாதம் | : | பங்குனி மாதம் 30ம் தேதி பேரையூர் தேர் அலங்காரம் திருவிழா. |

இது தவிர தர்மத்தூரணி கோட்டூர் மலையக்கோவில் முதலிய நந்தவனம், திருக்கொள்ளம்புதூர் விடுதி, நந்தவனம் பராமரிப்பு செலவுகள்; தர்ம கட்டளைக்களுக்காக ஏற்படுத்தப் பட்ட ஆட்களுக்கு மாதச் சம்பளங்கள்.

தர்மத்தூரணி ஸ்ரீ பெய்யாத விநாயகர் கோவில் படித்தரம்எண்ணெ அரிசி முதலியன.

கோட்டூர் சுந்தரநாயகி அம்மன் கோவில் தீபம், மலையக் கோவில் சனிஸ்வர பகவான் எண்ணை தீபம் முதலியன.

திருக்கொள்ளம்புதூர் ஸ்ரீ வில்வவனநாத சுவாமி நித்தியப்படி பள்ளியறைக்கட்டளை முதலியன மேலும் மேற்படி தர்மத்திலிருந்து

துன்முகி வருடம் ஆனிமாதம் (13—7—56) பேரையூர் தர்மத்தூரணி.

**ஸ்ரீ பொய்யாத விநாயகர் கும்பாபிடேகம்**

31—1—1975 ல் மீண்டும் பேரையூர் தர்மத்தூரணீ

**ஸ்ரீ பொய்யாத விநாயகர் கும்பாபிடேகம்**

சித்தார்த்தி வருடம் ஆனி மீ 17 உ க்கு 1—7—1979 தஞ்சை மாவட்டம் நன்னிலம் தாலுகா திருக்கொள்ளம்புதூர் ஸ்ரீ செந்தாநாயகி அம்பாள் சமேத ஸ்ரீ வில்வாரேஸ்வரர் நன்னீராட்டு விழா முதலியன நடைபெற்றன.

கொள்ளம்புதூரில்புதிதாக சௌந்தரமகாலட்சுமிகோவில் கட்டப்பெற்று 1—7—79உ திருக்குட நன்னீராட்டுநிகழ்ந்தது.



உ
சிவமயம்

மலையக் கோவிலில் ஒற்றை அடி, படிக்கட்டு, பெ. ராம. ராமஞ்செட்டியார் பிறப்பதற்காக வேண்டிக் கொண்டபின் ராமஞ்செட்டியார் 1876-ல் பிறந்ததும் அதற்கு ஞாபகார்த்தமாக 1880-ம்வூபடி வெட்டும் வேலை ஆரம்பித்து 1வூ 10மீ 12நாள் வேலை பார்த்து முடித்து உள்ளனர். அதற்கான கல்வெட்டில் உள்ளதை அப்படியே பிரதி எடுத்து, இத்துடன் தந்து உள்ளோம்.

# (கல்வெட்டு)

உ
சிவமயம்

சுப ஸ்ரீ சாலிவாகன சகாப்த்தம் தஅளஙo (1830) கலியுகாதி சதகூளஅயஉ (4982) யிங்லீஸ் தஅளஅய (1880)க்கு தமிழ் விசு வூம் ஐப்பசி மீ யச (14) உ மலையக்கோவிலுக்கு கேரள சிங்க வள நாடாகிய பிறம்பூா நாட்டில் யிலுப்பக் குடியான புகலிடமான பட்டினத்தில் சூடாமணி புறமுடையான் நச்சாந்துபட்டி என்று விளங்கிய திருமலை சமுத்திரத்தில் இருக்கும் பெரியகருப்பன் செட்டியார் மகன் ராமநாதன் செட்டி உள்ளிட்டார். மலையடிவாறம் குறடு மலைக்கு போய் வர படியும் செய்து சுனைக்கு போய்வரபடியும் கட்டி வைத்த தர்மம் பெ. று. இவை எழுதினது தஅளசயநு (1843) க்கு செம்டம்பர் மீ 10 உக்கு சுபானு வூ ஆவணி மீ உயகூ (29) உ திங்கட்கிழமை:



பக்தி செய்தார்க்குச் சித்தியளிக்கும் விநாயகன்
(வலம்புரி விநாயகர் மேல் விமானத்தில்
காணப்படும் சிற்பம்)



கீர்த்தி மிகச்செய்யும் திருப்பணியின் கிழக்கு
நுழைவாயில் இருபுறத்தும் விநாயகர்
எழுந்தருளும் சந்நிதிகள்



இடபாரூடராகக் காணும் எம்பெருமான் திருக்கோலம். வலப்புரம் விநாயகரும் இடப்புறம் இரு தேவியருடன் மயிலேறும் பெருமாள்



எங்கள் இலக்குமி ஆட்சிசெய்யும் திருக்கோயில் மகளிர் நன்கொடையால் மலர்ந்த அருட்கோயில் சௌந்தர மகாலெட்சுமியாய் தேவி வந்தமர்ந்த எழிற்கோலம்.



பொய்யாத விநாயகன் பொன்னடி பரவிய
இராமன் சீர்மிக எடுத்த திருக்கோயில்
அடுத்துக் காண்பது அம்பாள் குளமும்
அழகு சிந்தும் விடுதியும் ஆகும்



ஆறுபடை விடுடைய அண்ணலின் அழகுமிக்க
விமானத் தோற்றம்



பொருள் வளரப் புகழ் மலர திருப்பணிச் செல்வர்களின் வழித்
தோன்றல்கள் நடத்திய திருக்குட நீராட்டு விழாதன்னை என்றும்
நினைவுறுத்தி நிற்கும் கல்வெட்டு
ராஜ கோபுரத்தின் இடப்பக்கம் காணப்படுவது.



சொல்லர்கரிய மறு கும்பாபிடேகம் தனைச்சுட்டி நிற்கும் வள்ளன்மை
மிக்க வழித்தோன்றல்களின் பெயர்களைத் தாங்கி நிற்கும் பெரும்
கல்வெட்டு



தேவியின் பெருமைகளைத் தெளிவாகச் சொல்லி நிற்கும்
தெற்குக் கோபுர வாயில் தோற்றம்



சௌந்தரநாயகி சந்தனக்கோலம் கண்டு வந்தனம்
செய்தே வலம்வரும் வடப்புற வெளிப் பிரகாரம்

௳

சிவமயம்

# கல்திருப்பணியின் கவின்மிகு வரலாறு

## A. ராகவ அய்யங்கார்

## A. கோபி அய்யங்கார்

[கட்டுரை ஆசிரியர்கள் - A ராகவ அய்யங்கார் அவர்கள். A. கோபி அய்யங்கார் அவர்கள் இருவரும் பெ. ராம. குடும்பத்தினருடன் ஒன்றிப்பழகி நான்கு தலைமுறையினையும் நன்கு அறிந்தவர்கள். 1930 ம் ஆண்டு திருக்கொள்ளம்புதூரில் திருப்பணி தொடங்கிய நாள்முதல் பாலாலய கும்பாபிடேகம் 1937-ம் ஆண்டு தமிழகத்தையே கவர்ந்த மகாகும்பாபிடேகம், 1979-ஆண்டு ஜூலைத் திங்கள் முதல் நாள் நடைபெற்ற ஜீர்ணோர்த்தன அஷ்ட பந்தன திருக்குட நன்னீராட்டு விழா ஆகிய மூன்றினையும் கண்டு மகிழும் பேருபெற்றவர்கள். தற்சமயம் செல்லூரில் வசித்து வருகின்றனர்.

இவர்கள் இருவரும் உயர் திருவாளர்கள் பெ. ராம. ராமன் செட்டியார், பெ. ராம. லெட்சுமணன் செட்டியார், பெ. ராம. ராம. ராமனுதன் செட்டியார் அவர்தம் இளவல்கள், லெட்சுமணன் செட்டியார் சிதம்பரம் செட்டியார், பெ. ராம. லெ.ராமனுதன் செட்டியார், (சேது செட்டியார்) ஆகியோருடன் நெருங்கிப்பழகவும் இணைந்து செயலாற்றவும் வாய்ப்பு கிடைக்கப் பெற்று அளவளாவி மகிழ்ந்தவர்கள்.]

''தமிழகத்தில் உள்ள எல்லாக் கோயில்களிலும் நகரத்தார்களின் பங்கும் சேவையும் இல்லாத கோயில் இல்லை என்று கூறிவிடலாம். பொருள்களைத் தேடுவது ஒருபுறம் இருந்தாலும் தேடிய பொருளைத் தர்ம காரியங்களுக்கும் ஆன்மீகத்தை வளர்ப்பதற்கும் நகரத்தார்கள் மிகவும் செலவு செய்து முன்னணியில் இருந்து பணியாற்றியுள்ளார்கள். அவர்களது தர்ம காரியங்களை நான் மனமாரப் பாராட்டுகிறேன்.'' என்ற சிருங்கேரி ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகளின் அருள்வாக்கிற்கேற்ப செட்டிநாட்டில் ஒவ்வொரு குடும்பத்தார்களும் (மார்க்காக்களும்)

ஒருவரை ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு தெய்வத் திருப்பணி ஆற்று பெருவிருப்புடன் பாடல் பெற்ற ஸ்தலங்களைத் தேடிக் கண்டுபிடித்து கல் திருப்பணிகள் செய்து கொண்டிருந்த காலம்.

சோழ மன்னர்கள் காலத்து எழுப்பப்பட்ட தெய்வத் திருக்கோயில் கள்காலத்தால் சிதைந்தும் அழிந்தும் கிடக்க அவர்கள் (நிபந்தங்களாக) மான்யமாக விட்டுக்கொடுத்த நிலங்களிலிருந்தும் வருவாய் இல்லாது போயின. அதனல் எம்பெருமானர்க்கு நிகழும் நாள் வழிபாடும் தடைப் பட்டு பூசை முதலியன சீர்கெடத் துவங்கின. இந்நிலையிலே 'மன்னர் பின்னோர்' என்ற பழந்தமிழ் வாக்கிற்கிணங்க மாபெரும் பொருள் துணைக் கொண்டு நிறைவேற்றத்தக்க இப்பணிகளை மன்னரை அடுத்த தகுதியும் பொருளும் (நிதியும்) வாய்க்கப் பெற்றவர்களாகிய தன வணிகச் செல்வந் தர்களாகிய நகரத்தார்கள் மேற்கொள்ளத் தொடங்கினர்.

அருள்மிகு சௌந்தர நாயகி உடனமர் வில்வ வனநாதர் அமர்ந்து அருள் செய்யும் திருக்கொள்ளம்புதூர் திருக்கோயில் அப்போது செங்கல் கட்டிடமாக இருந்தது. 1925-ம் ஆண்டு என்று நினைவு கோயில் பழுத டைந்தும் சிதைந்தும் கோயிலுக்கு வரவேண்டிய வருமானங்கள் குறைப் பட்டும் வரவே இறைவனுக்கு நிகழவேண்டிய 6 கால பூசை 1 கால பூசை யாகி மிகவும் அவல நிலையை எய்திற்று. இந்நிலை கண்ட ஊரார் மனம் மிகவும் வருத்தமுற, செய்யும் வழி அறியாது தயங்கி இருந்தனர்.

அவ்வமயம் தஞ்சை மாவட்டம் பாபநாசம் தாலுகா ஆலங்குடி என்னும் தட்சிணாமூர்த்தி திருத்தலம் தேவகோட்டை திரு பழ. செ. லெ. பழ. பழநியப்ப செட்டியார் அவர்களால் திருப்பணி செய்யப்பட்டு வேலைகள் மும்மரமாக நடைபெற்று வந்தன.

திருக்கொள்ளம்புதூரைச் சேர்ந்த பிரபல மிராசுதார்கள் திரு. V. சோம சுந்தர முதலியார், வைத்தியர் திரு. வீராசாமி பிள்ளை, வேடம்பூர் மிராசு வாஞ்சிலிங்கம் பிள்ளை மற்றும் ராமலிங்கம் பிள்ளை ஆகியோர் ஆலங்குடி வந்து திரு. பழநியப்ப செட்டியாரைக் கண்டு திருக்கொள்ளம்புதூர்த் திருக்கோயில் சீர்க்கேடுற்று சிதிலமடைந்து இருக்கும் அவல நிலையை எடுத்துரைத்து வில்வ வனநாதர் கோயில் திருப்பணியை மேற்கொள்ளும்படி வேண்டினர். ஆனல் பழ அவர்கள் தம்முன் இருக்கும் ஆலங்குடி பெரிய திருப்பணியை நினைவு கூர்ந்து தம்மால் மற்றுமொரு இறைபணியில் தற்போது ஈடுபட முடி யாது எனக்கூறி, எனினும் கோயில் பூஜை முதலியன ஒழுங்காக நடை பெற வழி செய்வோம் என நவின்று திருக்கொள்ளம்புதூர் வந்து அனைத் தையும் பார்வையிட்டு அவ்விடம் ஏஜண்டாக என்னை நியமித்து பூஜை முதலியன முறைப்படி நடைபெற வழிவகுத்தனர்.

அவ்வமயம் நச்சாந்துபட்டி உயர்திரு. பெ. ராம. ராமன் செட்டியார் அவர்கள் தெய்வத் திருப்பணி செய்யத் திருவுளங்கொண்டு திருத்தலங்களைத் தேர்வு செய்து கொண்டிருந்த நேரம். புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சேர்ந்த பேரையூர் நாகநாத சுவாமி கோயிலைத் திருப் பணி செய்ய மன்னர் அவர்கள் அனுமதி வழங்கியிருந்த போதிலும் அத்தலம் பாடல் பெற்ற ஸ்தலமாக இல்லையே என்று தயங்கியிருந்த நேரத்தில் அவர்களின் திருவுளக் குறிப்பினை அறிந்த தேவகோட்டை பழ. செ லெ. பழ. அவர்கள் ஏனைய மிராசுதார்களையும் அழைத்துக் கொண்டு நச்சாந்துபட்டி வந்து திரு. ராமன் செட்டியார் அவர்களைக் கண்டு திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற திருக்கொள்ளம்புதூர் ஸ்தலப் பெருமைகளை விளக்கமாக எடுத்துரைத்து கோயிலின் தற்போதைய அவல நிலைமையினையும் நவின்று திருப்பணியை மேற்கொள்ளுமாறு வேண்டினர்.

சான்றோரின் வேண்டுகோளுக்கிணங்கிய திரு. ராமன் செட்டியார் அவர்களும் திருக்கொள்ளம்புதூர் வந்து ஸ்தலத்தைப் பார்வையிட்டனர். அருள்மிகு செளந்தரநாயகி வில்வ வனநாதர் திருக்கோலம் அவர்களை மிகவும் கவர்ந்தது. திருவருள் கூட்டுவிக்க திருப்பணி செய்யவும் அவர்கள் உள்ளம் இசைந்தது. ஆலயத்திருப்பணி வேலைகள் முழுவதும் வேறுயார் சம்பந்தமும் இல்லாமல்முற்றும் தன் சுய பொறுப்பிலேயே ஏற்றுச் செய் வதானுல் உடன்படுவதாகத் தெரிவித்தார்கள். மேற்பார்வை நிர்வாகப் பொறுப்பும் (மானேஜிங் டிரஸ்டி) தனக்கே தரவேண்டும் என்ருர்கள்,

எனவே ஊரார்கள் உடனே நாகை சென்று தேவஸ்தானக் கமிட்டி யாரை அழைத்து வந்தனர்- மேற்படி கமிட்டி தலைவர் திரு. K. S. வெங்கட் ராமய்யர் திரு. பெ. ராம. ராமன் செட்டியார் அவர்களை மட்டும் டிரஸ்டி யாக ரத்தாக்ஷி ஆண்டு ஆவணி மீ" 30உ நியமனம் செய்தார்.

ஆலய நிர்வாக பொறுப்பேற்றவுடன் திரு. ராமன் செட்டியார் அவர்கள் செய்த முதற்பணி இறைவனுக்கும் இறைவிக்கும் (6) ஆறு கால பூஜை ஒழுங்காக நடைபெற வழி வகுத்ததுதான். நில வருவாய் கள் பெருக வேளாண்மைத் தொழில் முடுக்கிவிடப்பட்டது. மலர் வழி பாட்டுக்கு நந்தவனம் ஒன்று புதியதாக அமைக்கப்பெற்றது. திரு கோபி அய்யங்கார் அவர்களும் நந்தவன மேற்பார்வையாளராக நியமனம் செய்யப்பட்டு பணி தொடரப்பட்டது. மாத ஏறுபடி, வருட ஏறுபடி ஏனைய உற்சவங்கள் கிரமப்படி நடத்தப்பட்டு வர ஆரம்பித்தன.

1930-ம் ஆண்டு பிரமோதூத ஆண்டு ஆனிமீ" பாலாலய கும்பா பிடேகம் செய்யத் திட்டமிடப்பட்டு ஊமத்தநாடு வைத்தியநாதசிவாசாரி யார் சர்வ சாதகத்துடன் சுமார் 55 சிவாசாரியார்கள் யாகம் செய்ய

பெரும் வேள்விக் கொட்டகைகள் அமைத்து யாக குண்டங்கள் நிறுவி பாலாலயம் என்ற அளவில் இல்லாமல் பெரும் கும்பாபிஷேகமாகவே ஷெ வேலைகளை செட்டியாரும் அவர்தம் இளவலும் தொடங்கி வைத்தார்கள். பின்னர் ஷெ ஆண்டு ஆவணித் திங்கள் 19உ திருப்பணி முகூர்த்தம் செய்யப்பட்டு பழைய கோயில் கட்டிடங்கள் இடிக்க ஏற்பாடு செய்யப் பட்டன.

ஸ்வாமி கர்ப்பக்கிரகம் நீங்கலாக மற்ற எல்லாக் கட்டிடங்களும் முழுவதும் இடித்து நிரவி புதியனவாக எழுப்பத் திட்டம் தீட்டப்பட்டது. ஆலங்குடி, ஆண்டாங்கோயில் போன்ற திருப்பணி வேலைகளைச் செம்மை யாக நடத்திக் கொடுத்த ஸ்தபதி மு. வை. ராமனுத ஸ்தபதியையும் அவர் குமாரர் நீலமேகஸ்தபதியையும் நியமனம் செய்து கருங்கற்களுக்கு ஆர்டர்கள் செய்யப்பட்டன.

தஞ்சை மாவட்டத்தில் கருங்கற்கள் கிடைப்பது அரிதே! பட்டிமலைகுப்பம், திருவண்ணாமலை, வடமதுரை, குளத்தூர், திருமயம் ஆகிய ஊர்களில் இருந்து கற்கள் லாரி, ரயில்வே வாகன்கள் மூலமாக வரத்தொடங்கின.

கருங்கற்கள் பெரிதாக ஏற்றிச் செல்லப்படுவதால் கொரடாச் சேரியில் உள்ள வெட்டாறு பாலம் சேதமடையும் என (P. W. D.) டிபார்ட்மெண்ட் கருதித் தடை செய்தனர். அங்ஙனம் சேதமடைந்தால் அப்பாலத்துக்கு ஏற்படும் செலவை ஏற்றுக் கொள்ளுகிறது என்று ஷெயாருடன் உடன்படிக்கை செய்து கற்பணி வேலைகள் தொடர்ந்து வருவனவாயின.

நாள்தோறும் 500 முதல் 700 வரை கல் தச்சு ஆட்கள் பணி செய்வா ராயினர். நாளடைவில் அவர்தம் எண்ணிக்கை பெருகி கொத்து, தச்சு, சித்து வேலைக்காரருடன், நாளொன்றுக்கு 1700 முதல் 2000 பேராக விரிந்து பணி விரைவாக நடைபோடத் தொடங்கிற்று. மேற்பார்வை யாளராக திருக்கொள்ளம்புதூர் கந்தசாமி செட்டியார் R. சாமிநாத அய்யர் ஆகியோர் பணியாற்றி வந்தனர்.

கற்கள், உத்திரங்கள் முதலியன ஏற்றி இறக்க கிரேன் (கிரையின்) இயந்திரம் பயன்படுத்தப்பட்டது.

திருப்பணி வேலைகள் முழுவதையும் மாதத்தில் 20 நாட்கள் வரை திருக்கொள்ளம்புதூரிலேயே தங்கியிருந்து திரு. ராமன் செட்டியார் அவர்கள் மேற்பார்வையிட்டு ஊக்குவித்து வந்தார்கள். அவர்கள் கண்ணில்படாத எந்தப் பொருளும் இல்லை என்றே சொல்லலாம்.

அவர்கள் நினைவாற்றல் வியத்தற்குரியது. கல் தச்சர்கள் பொருத்தமான கல்லைத்தேடி அலையும்போது அவர்களை அழைத்து விபரம் கேட்டு இன்ன இடத்தில் இன்ன அளவில் கிடக்கின்றது, எடுத்துபோ, சரியாயிருக்கும் என்பார்கள். தச்சர்கள் அவற்றை அங்ஙனமே எடுத்துச் சென்று பொருத்தி நோக்கி உள்ளம் வியக்கப்பாராட்டுவர்.

திருப்பணி வேலைகள் நடைபெற்று வரும் காலத்திலேயே பெ. ராம குடும்பத்தினர் வந்து தங்குவதற்கும் திருப்பணி அலுவல்கள் தொடர்ந்து நடை பெற்றுவரும் பொருட்டும் பெ. ராம, விடுதி ஒன்று கட்டி முடிக்கப்பெற்றது.

இங்ஙனம் தெய்வப்பணி அட்டியின்றி நடந்துவரும்போது அதன் நான்காவது ஆண்டில் திரு ராமன் செட்டியார் அவர்கள் ''ராமயாணம் வாசித்து முடித்து வருவதாகவும் அதுமளவு உள்ள வேலைகளைப் பணித்து முடித்து வைக்கும்படியும் சொல்லி ஊர் சென்றுர்கள். இறைவன் திருவுளப்பாங்கினை என்னவென்று சொல்வது. ஊர் சென்றவர்கள் திடீரென உடல் நலமில்லாது இருந்து இறைவன் திருவடி சேர்ந்து விட்டார்கள். இங்கு கொள்ளம்புதூரிலோ ஊழியர்களின் சொல்லொணுத் துயரம் விவரிக்கவுண்ணுதது.

பின்னர், பெ. ராம. இலட்சுமணன் செட்டியாரும், பெ. ராம ராம. ராமனுதன் செட்டியார், பெ. ராம. ராம. லெட்சுமணன் செட்டியார், பெ. ராம. ராம. சிதம்பரம் செட்டியார், பெ. ராம. லெ. ராமனுதன் செட்டியார் ஆகியோரும் விடாமுயற்சியுடன் ஈடுபட்டு சுமார் எழுநூருயிரம் ரூபாய் செலவில்திருப்பணி வேலைகளை குறைவின்றி நிறைவு பெறச்செய்து ஈஸ்வர ஆண்டு ஆனிமீ 14உ (27-6-37) ஞாயிற்றுக்கிழமை சுமார் 100 சிவாச்சாரியார்களுடன் யாகசாலைகள் அமைத்து திருக்குடநீராட்டு விழாச் செய்து வைத்தனர்-

1944ம் ஆண்டுவரை நேர்பார்வையில் வைத்து நடத்தி பிறகு இந்து சமய அற நிலைய ஆட்சி துறையினரால் நியமனமானதில் முதல் நிர்வாக அதிகாரி ஜெகதீசன் என்பவரிடம் நல்ல முறையில் ஆலய நிர்வாகம் ஒப்படைத்து தொடர்ந்து அக்குடும்பத்தினர்களே டிரஸ்டிகளாக இருந்து இணைந்து நிர்வகித்து வந்தார்கள்.

கற்கோயில் திருப்பணி, கவினுற அமைத்தும், கோபுரத் திருப்பணி குலவுற இயற்றியும், அமுதப் பூப்பொய்கை அழகுறச் செய்தும் நந்தவனம் நலமாயமைத்தும், திருப்பணிச் செயல்யாவும், செவ்வனே நிறைவேற்றப் பட்ட பெரும் புண்யமும், பெரும் அழியாப் பெயரும் புதுக்கோட்டை மாவட்டம் நற்சாந்துபட்டி திருமிகு. பெ. ராம குடும்பத்தினரைச்சாரும் என்பதில் ஐயமில்லை. பெ. ராம. குடும்பத்தினர்கள் நீடுழி காலம் வாழ்ந்து ஈசனுக்கு தொண்டு செய்வார்களாக.

உ

சிவமயம்

நச்சாந்துபட்டி

# பெ. ராம.

லெ. அருணாசலம் செட்டியார்

உயர்திரு பெ. ராம. ராமன் செட்டியார் அவர்களும், உயர்திரு. பெ. ராம. லெட்சுமணன் செட்டியார் அவர்களும் எனக்கு அம்மான் (தாய் மாமன்) வேண்டும்.

எனக்கும் பெ. ராம. குடும்பத்திற்கும் நீண்ட காலமாக நெருங்கிய தொடர்பு இருந்து வந்திருக்கிறது. அவர்கள் குடும்பத்தில் அனைவருடனுமே நான் நெருங்கிப் பழகும் பேறு பெற்றவன்.

நானும் மலேசியாவில், மலாக்காவிற்கு அடிக்கடி போய் வந்திருப்பதால், அவர்கள் தொழில்களைப் பற்றியும் நன்கு தெரியும். பெ. ராம. குடும்பத்தினர்கள் கடும் உழைப்பாலும், நேர்மையான முறையிலும் பெரும் பொருள் ஈட்டினார்கள். ஈட்டிய பொருளில் பெரும் பகுதியை தர்மங்களுக்காக ஒதுக்கி அவைகளை இன்றும் மிக நல்ல முறையில் நடத்தி வருவது நாம் அனைவரும் அறிந்ததே.

1937-ம் ஆண்டு செட்டிநாடே திரண்டு கூடியிருந்து தஞ்சை மாவட்டமும், தமிழகமும் இன்றும் உள்ளத்தை விட்டு மறக்க முடியாத அளவு சிறப்புடன் நடைபெற்ற திருக்கொள்ளம்புதூர் கும்பாபிஷேக நேரத்தில் நான் அங்கு மூன்று மாதம் தங்கியிருந்து அனைத்து நிகழ்ச்சிகளிலும் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறேன். அதேபோல் 1979-ம் ஆண்டு ஜூலை மீ 1௳ நடைபெற்ற திருக்குட நன்னீராட்டு விழாவிலும் கலந்து மகிழ்ந்தேன்.

அவ்விழா சம்பந்தமாய் ஒரு சிறப்புமலர் வெளியிடப் போவதாகவும், அதற்கு ''பெ.ராம.'' குடும்ப வரலாற்றைப் பற்றி ஒரு கட்டுரை எழுதித் தர வேண்டுமென மாப்பிள்ளைகள் கேட்டுக் கொண்டார்கள்.

திருப்பணிச் செல்வர்களான திரு. பெ,ராம. ராமன் செட்டியார், திரு. பெ. ராம. இலட்சுமணன் செட்டியார் ஆகிய இரு பேருடைய ஐயா (பாட்டனார்) திரு. பெரியகருப்பன் செட்டியார் அவர்களுக்கு மலாக்காவிலும் சிங்கபூரிலும் சிறிய அளவில் வட்டிக்கடைகள் இருந்தன.

பெரியகருப்பன் செட்டியாரவர்களுக்கு இரண்டு புதல்வர்களும் இரண்டு பெண்மக்களும் ஆக நான்கு குழந்தைகள் இருந்தார்கள்.

அவர்கள் பெயர்களாவன: 1. பெ. ராமன் செட்டியார் அவர்களுக்கும் ஆவணிப்பட்டி நல்லமுத்தஞ் செட்டியார் மகள் சிகப்பி ஆச்சியை திருமணம் செய்வித்தார்கள். 2. பெ. சின்னன் செட்டியார் அவர்களுக்கு விரையாச்சிலேயில் பிறந்த ஏகம்மை ஆச்சியை மணமுடித்து வைத்தார்கள். பெண் மக்களிருவரில் ஒருமகளை நச்சாந்துபட்டி பொதியன் செட்டியார் வீட்டிலும், மற்றவரை அரிமளத்திலும் திருமணம் செய்து கொடுத்தார்கள்.

பெ ராமன் செட்டியார் அவர்கட்கு நாகம்மை, அழகம்மை என்ற இரண்டு பெண் குழந்தைகளும், பெ. சின்னன் செட்டியாருக்கு விசாலாட்சி என்ற பெண்மகவு ஒன்றும் இருந்தனர். மேலும் ஆண் குழந்தைகள் வேண்டும் என்பதற்காக பொதுவில் ஏடுகள் எழுதி ராமாயணம் படித்து வந்தார்கள். அதன் விளைவாக பெ. ராமன் செட்டியாருக்கு இரண்டு ஆண்மகவுகள் பிறந்தன. அவைகட்கு இராமன் லெட்சுமணன் எனப் பெயர் சூட்டி உள்ளம் உவகை கடலில் ஆழ்ந்தவர். பெ. சின்னன் செட்டியாருக்கு ஆண் குழந்தையே பிறக்காததால் அண்ணன் மகன் லெட்சுமணனைச் சுவீகாரம் விடும்படி கேட்டார்களாம். அதற்கு ராம. அவர்கள் ஒத்துக் கொள்ளாததால் விரையாச்சிலேயில் பிள்ளை கூட்டி இராமன் என்று பெயர் வைத்ததோடு கண்டிப்பாகப் பாகப்பிரிவினை செய்து கொள்ளவேண்டும் என்று சொன்னார்களாம். ராம. அவர்களும் ரொம்ப யோசித்தார்களாம். பலர் தைரியம் சொன்னதின் பிறகு ஒத்துக்கொண்டு மலாக்கா கடையை ராம. அவர்களும், சிங்கப்பூர்க் கடையைச் சின்னன் செட்டியார் அவர்களும் ஒப்புக்கொண்டு பார்த்து வந்தார்களாம்.

பெ. ராமன் செட்டியாரின் மூத்தமகள் நாகம்மையை நச்சாந்து பட்டி பெரி. லெட்சுமணன் செட்டியாருக்கும் இளையமகள் அழகம்மையை விரையாச்சிலே சித. முருகப்ப செட்டியாருக்கும் திருமணம் செய்து கொடுத்ததோடு ஷை. சிதம்பரம் செட்டியார் மகள் சாத்தம்மையை பெ. ராம. ராமன் செட்டியாருக்குத் திருமணம் செய்தார்கள். பெ ராம. லெட்சுமணன் செட்டியாருக்கு ஆவணிப்பட்டியில் அவர்கள் அம்மான் ந.மு, முத்தப்ப செட்டியார் அவர்கள் மகள் அழகம்மையை மணமுடித்தார்கள். ஷை நல்லமுத்தப்ப செட்டியாருக்கும் மலாக்காவில் கடையிருந்தது ராம. அவர்களும், லெ. அவர்களும் பலமுறை மலாயாவுக்குப் போய் வந்தார்கள். அப்போது ந.மு.மு. வுக்குக் கூட்டாக மூவாரில் பெ. ராம. குடும்ப விலாசத்தில் கடைவைத்தார்கள். பின்னால் ஈப்போ, சிலோன், பர்மாவிலும் கடைகள் வைத்தார்கள். மன்னார்குடியிலும் கடை இருந்தது.

பெ. ராம. ராமன் செட்டியார் சாத்தம்மை ஆச்சி அவர்கட்கும் மக்கட்பேறு வகையில் ஆண்மக்கள் மூவர் பிறந்திருந்தனர். விபரம்:

1. பெ. ராம. ராம. ராமநாதன் செட்டியார்
2. பெ. ராம, ராம. லெட்சுமணன் செட்டியார்.
3. பெ.ராம. ராம. சிதம்பரம் செட்டியார்.

பெ. ராம. லெட்சுமணன் செட்டியார் அழகம்மை ஆச்சிக்கும் ராமநாதன் என்ற சேது செட்டியார் மட்டுமே ஏக புதல்வனாக இருந்தார்கள். அழகம்மை ஆச்சி இறந்தபிறகு லெ. அவர்கட்கு இவ்வூர் வீ.மு.அ. சாமிநாதன் செட்டியார் மகள் விசாலாட்சி ஆச்சியை இரண்டாவதாக மணம் முடித்தார்கள். லெ. மனைவி விசாலாட்சி ஆச்சி கொஞ்ச காலத்தில் இறந்துவிட்டால் அவர்கட்கு மூன்றும் தாரமாக ஆத்தங்குடியில் அழகம்மை ஆச்சியை திருமணம் செய்தார்கள்.

சிறுவயதிலேயே கடல் கடந்து மலாக்கா சென்று தொழிலில் ஈடுபட்ட திரு- பெ. ராம. ராமன் செட்டியார் அவர்கள் பல தொழில்களையும் சிந்தித்து சீர்தூக்கிப் பார்த்து எதிர்காலத் தீர்க்கதரிசனத்துடன் (தொலை நோக்குடன்) செயல்பட்டார்கள். எதிர்காலத்தில் ரப்பர் தொழிலுக்கு உள்ள முக்கியத்துவத்தினை உணர்ந்து இன்றைக்குச் சுமார் 75 ஆண்டுகட்கு முன்னமேயே ரப்பர் பயிரிட விரும்பி மலாக்கா பகுதிகளில் பெரும் வனாந்திரக் காடுகளை வாங்கி காடழித்துத் தொடர்ந்து ரப்பர் பயிரிட்டு கடும் உழைப்பும், விடாமுயற்சியும் கொண்டு பாடுபட்டு பெரும் ரப்பர்த் தோட்டங்களாக மாற்றினார்கள். இதற்கு ஜாவா, சுமத்ரா தீவுகளிலிருந்து ரப்பர் வித்துக்களை வரவழைத்திருந்தார்கள்.

மலேயாவில் முதன் முதலாக காட்டை அழித்து ரப்பர் பயிரிட்ட பெருமை பெ. ராம. ராமன் செட்டியாரையே சாரும்.

தென்னாட்டிலிருந்து மலேசியாவில் மலாக்கா பகுதிகளில் முதன் முதலில் ரப்பரை உற்பத்தி செய்தவர் என்பதற்கு ஆதாரம் மலேசியாவில் வெளியாகியிருக்கும் ''மலேசியா மெர்த்தேகா'' என்ற மலர்சான்று பகர்கின்றது. மலேசியாவில் ரப்பர் சம்பந்தமாக வெளிவந்த அனேக ஆங்கில வெளியீடுகளிலும் இக்குறிப்புகள் காணக்கிடக்கின்றன. மேலும் மூவார், ஈப்போ, இலங்கை முதலிய இடங்களில் தோட்டம் வளர்த்து பெரும் அளவில் ரப்பர் உற்பத்தியைப் பெருக்கித் தன் சுய முயற்சியினாலும் கடும் உழைப்பினாலும் பெரும் பொருள் சேர்த்து முன்னேறியவர்கள் என்று கூறினால் மிகையாகாது.

பெ. ராமன் செட்டியார், பெ. சின்னன் செட்டியார் காலத்தில் துவக்கிவைக்கப் பெற்ற புரட்டாசி மாதத்தில் இராமாயண 'ஏடுபடித்தல்' விசேடம் இன்றளவும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இரண்டு வகைகளிலும் ஆண்டுக்கு ஒருவராக முறை வைத்துப்படித்து வருகின்றார்கள். மலாக்காவிலும் ஷ ஏடு தொடர்ந்து படித்து வந்தார்கள். தற்பொழுது கடந்த பத்து ஆண்டுகளாக ஷ படங்களும் ஏடுகளும் இங்கு கொண்டு வரப்பட்டு திருக்கொள்ளம்புதூர் பெ.ராம. திருப்பணி விடுதியில் வைக்கப்பட்டு ஆண்டுதோறும் புரட்டாசி மாதத்தில படிக்கப்பட்டு வருகிறது.

ராம. அவர்கள் கடைசியாக 1919 அல்லது 1920ல் நான் மலேயாவில் இருக்கும் போது மூவார்கடை ஏஜண்டை விலக்கிவிடுவது சம்பந்மாக அங்கு வந்து வந்தார்கள்.

ராம. அவர்கள் பிறந்தது 1876
மறைந்தது 1934

இராமாயணத்தில் ராமர், லெட்சுமணர்கள் எப்படி இருந்தார்கள் என்று கேட்டிருக்கிறோமோ அப்படி அண்ணன் தம்பி இருவரும் ஒற்றுமையாகப் பாசமுடன் இருந்தார்கள்.

திருக்கொள்ளம்புதூரில் திரு. ராம. அவர்கள் நடத்திய திருப்பணி வேலைகள் முடிந்து சில சில்லரை வேலைகள் பாக்கி இருந்தன. ராம அவர்கள் மறைவுக்குப்பிறகு இளவல் லட்சுமணன் செட்டியார் அவர்களும் புதல்வர்கள் ராமநாதன் செட்டியார், லெட்சுமணன் செட்டியார், சிதம்பரம் செட்டியார் அவர்களும் லெ. சேது செட்டியாரும் பெரும் முயற்சிகள் செய்து பாக்கி வேலைகளை முடித்து 27—6—37ல் மிகச் சிறப்பாக கும்பாபிஷேகம் செய்தார்கள்



உ

சிவமயம்

# யாழ்நூல் அரங்கேற்றம்

யாழ்நூல் என்பது ஓர் இசைத்தமிழ் நூலாகும். தமிழ் இசை பற்றிப் பொதுவாகவும் யாழிசையினைப் பற்றியும் பல்வேறு வகையான யாழ்வகைகளைப் பற்றிச் சிறப்பித்தும் கூறும் நூலாகும். சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதிய அடியார்க்கு நல்லார் காலத்திலேயே தமிழிசை பற்றிய தொன்னூல்கள் கிடைக்கப் பெருது காலத்தால் மறைந்து போயின. சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையில் வரும் இசைக்குறிப்புகளுக்கு விளக்கம் பெறமாட்டாது அறிஞர்கள் மயங்குவார்களாயினர். இக்காரணம் பற்றியே பல்கலைக்கழகத்தாரும் சில காலம் அரங்கேற்று காதையைப் பாடத் திட்டத்தினின்றும் ஒதுக்கி வைத்திருந்தனர். இந்நிலையில் டி. அரங்கேற்று காதையில் யாழிசைபற்றி வரும் இருபத்தைந்து அடிகளுக்கு உரை விளக்கம் போன்றே இவ்யாழ்நூல் வெளி வந்திருப்பது தமிழ் மக்கள் பெற்ற பெரும் பேறேயாகும்.

தமிழ்த் தாத்தா உயர்திரு. உ. வே. சாமிநாதய்யர் அவர்களின் பெருமுயற்சியால் 1892-ம் ஆண்டில் சிலப்பதிகாரம் முதன் முதலில் முழுமையான பதிப்பாக வெளியிடப் பெற்றது. அந்நூலில் வரும் இசை பற்றிய குறிப்புகளை ஆராய்ந்து விளக்கம் எழுத அந்த ஆண்டிலேயே அருட்டிரு விபுலானந்த அடிகளை இம்மண்ணுலகில் தோன்றச் செய்தது இறைவனின் அளப்பரியாத் திருவருளே ஆகும்.

தமிழ்த்தாய் செய்த தவப்பயனால் ஈழ நாட்டில் மட்டக்களப்பு நகரை அடுத்துள்ள காரேறுமூதூரில் வேளாண் மரபில் வந்த சாமித் தம்பியார்க்கும் கண்ணகி வழிபாட்டில் சிறந்து விளங்கிய கண்ணம்மையார்க்கும் கர ஆண்டு பங்குனித் திங்கள் 16-ம் நாள் (27—3—1892) திருமகனாய் அவதரித்தார்கள்.

அடிகளாரின் இளமைப் பெயர் மயில்வாகனன் என்பதாகும். தமிழ், ஆங்கில மொழி அறிவில் இளமையிலேயே சிறந்து விளங்கிய அடிகள் தமது 16-வது ஆண்டில் கேம்பிரிட்ஜ் பல்கலை கழகத் தேர்வில் வெற்றி பெற்று ஆசிரியப் பணியை மேற்கொண்டார்.

பின்னர் அடிகளார் துறவறம் பூண்டதும், பெற்ற உயர்கல்வியும் ஆற்றிய கல்வித் தொண்டுகளும் சொல்லில் அடங்கா. விரிவஞ்சி விடுகிறோம்.

அடிகளார் பதினன்கு ஆண்டு அரிதின் முயன்று ஆக்கிய தொல் நூல், ஆய்வு நூல் இந்த யாழ்நூல். சிலப்பதிகாரம் முதலிய தமிழ் இலக்கிய நூல்களில் காணப்பெறும் இசைக் குறிப்புகளுக்கு விளக்கமாக வெளிவந்த இந்நூலுக்கு உரை தேடும் நிலையில் இன்று நாம் உள்ளோம். மறைந்து கிடக்கும் இந்நூலின் மாண்புகளை வெளிப்படுத்திப் பயன் கொள்ள தமிழ் இசை, இலக்கிய அன்பர்கள் முனைவார்களாக.

அரிதின் முயன்று ஆக்கிய இத்தமிழ் இசை நூல் அரங்கேற்றம் கரந்தைதமிழ்ச் சங்கத்து ஆதரவில் திருக்கொள்ளம்புதூர்த் திருக்கோயிலில் ஆளுடைப் பிள்ளையார் திருமுன்பு உயர்திரு பெ.ராம.ராம.சித. சிதம்பரம் செட்டியார் அவர்களின் பேரன்பாலும் ஆதரவினாலும் பொருள் உதவி கொண்டும் தமிழ்கற்ற சான்றோர் பலரின் முன்னிலையில் சர்வசித்து ஆண்டு ஆனித்திங்கள் 6, 7-ஆம் நாட்களில் (20-21/6/1947) இனிது நிறைவேறியது.

முதல் நாள் நிகழ்ந்த ஊர்வலத்தில் திருமிகு விபுலானந்த அடிகளாரின் உள்ளத்திலே தோன்றிய திருவருள் உணர்வுக் குறிப்பினால் மலர்ந்த இசைக் கணக்கு ஆய்வும் செயல்முறை ஆய்வுக்கு உழைப்பு நல்கி அடிகளாரின் ஓவிய அமைப்புப்படி வடிவம் அமைத்துக் கொடுத்த க. பொ. சிவானந்தம் பிள்ளையின் உழைப்பும் பெ. ராம. ராம. சிதம்பரம் செட்டியார் அவர்களின் அளவில்லாப் பொருள் உதவியும், பழந்தமிழ் உலகம் இசைத்து மகிழ்ந்த, இலக்கியங்கள் நவின்ற பல்வேறு வகையான இசைக் கருவிகளை நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தின. அவையாவன: முளரியாழ், சுருதி வீணை, பாரிசாத வீணை, சதுர்தண்டி வீணை ஆகியன ஆகும். இவைகள் பின்னர் க. பொ. சிவானந்தத்தால் இசைத்துக் காட்டப்பட்டன.

அன்று நிகழ்ந்த வரவேற்புரையில் திரு. சித. அவர்கள், "திருஞானசம்பந்தப் பெருமான் தம் நாவலமே கோலாகக் கொண்டு ஆற்று வெள்ளத்தினை கடந்து இத்திருக்கோயில் பெருமானைக் கண்டுமகிழ்ந்தது போல நம் அருட்திரு விபுலாநந்த சுவாமிகளும், பிள்ளையார் அருளிய இன்னிசைச் செழும் பாடல்களை இசைத்து நல்லிசை வளர்த்த திருநீலகண்ட யாழ்ப்பாணரது இசைக்கருவியாகிய செம்முறைக் கேள்வியென்னும் சகோட யாழின் இயல்பினைக் காண விரும்பிக் காலமென்னும் பேராற்று வெள்ளத்தினைத் தம் கணித நூற் புலமையாகிய கோலினாலே கடந்து பண்டைத்

தமிழர் இசைக் கருவியாகிய யாழின் இயல்பினையும், அக்கருவியில் இசைக்கப் பெற்ற இசைத் தமிழ்த் திறங்களையும் கண்டு மகிழ்ந்து அம்மகிழ்ச்சியால் விளைந்த பயனைத்தமிழகம் பெற்றுய்தல் வேண்டுமென்னும் பெருங்கருணையினாலே இசைத்தமிழ் நூலாகிய யாழ்நூலை இயற்றியுள் ளார்கள்'' என்று குறிப்பிட்டது சாலவும் பொருந்தும். 1947-ம் ஆண்டில் யாழ்நூலினை வெளியிட்டு அரங்கேற்றம் நிகழ்த்திய திரு.பெ. ராம.ராம. சித. அவர்கட்கும் மீண்டும் இரண்டாம் பதிப்பாக 1974ம் ஆண்டு இந் நூல் வெளிவர பெருந்துணையாய் இருந்து வெளிக் கொணர்ந்த அண்ணா மலைப் பல்கலைக் கழக தமிழ்த்துறைத்தலைவர் தமிழ்ப் பேராசிரியர், திருமிகு க. வெள்ளைவாரணனார் அவர்கட்கும் தமிழ் உலகம் என்றும் நன்றிக்கடப் பாடுடையது.

இனி, யாழ்நூல் தோன்றிய விதம்குறித்து அடிகளார் அவர்களே தம் திருவாய் மலர்ந்துள்ளார்கள். அதனை அன்பர்கள் விரிவாக அறிதல் வேண்டி யாழ்நூல் பதிப்பினைத் தனியே தருகின்றேன்.



சிவமயம்

# "நூல்தோன்றிய வரன்முறையும் அவையடக்கமும் நூற்பயனும்"



நூலெழுதுவோர் மரபின் வண்ணம் இதுவரையுந் தன்மைப்பன்மை வழங்கியதனை நிறுத்திக் கொண்டு, தன்மையொருமையில் நின்றுகூறும் இச்சின் மொழிகளுக்கும் அறிஞர் செவிசாய்த் தருள்வாராக.

ஐயிரண்டு ஆண்டுகளாக நேரம் கிடைக்கும் போதெல்லாம் முயன்று குருவருளினாலும், தமிழ்த்தெய்வத்தின் கடைக்கண் நோக்கினாலும் இவ்வாராய்ச்சி நூலினை ஒருவாறு எழுதி முடித்தேன். யாழ்க்கருவி யொழிந்த பிற இசைக்கருவிகளைக் குறித்தும், இசையிலக்கணம், இசைப் பாட்டிலக்கணம், இசைக்கலை வளர்ச்சி யென்னும் பொருள்களைக் குறித்தும் ஆராய்ந்து கண்ட முடிவுகள் சில கையிலுள்ளன. காண வேண்டியன இன்னும் பலவுள. இறைவன் திருவருள் பாலிப்பானாயின், ஏற்ற காலத்திலே அம்முடிவுகள் மற்றொரு நூலுருவாக வெளிவருதல் கூடும்.

இவ்வாராய்ச்சி நடந்து கொண்டிருக்கும் பொழுதே மதுரைத்தமிழ்ச் சங்கத்திலும், கரந்தைத் தமிழ்ச்சங்கத்திலும், சென்னைப் பல்கலைக் கழகத்திலும், யாழ்ப்பாணத்து ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்திலும் பிற கல்விக் கழகங்களிலும் இப்பொருள்பற்றிய விரிவுரைகள் செய்ய நேர்ந்தது. அவ்வுரைகளைக் கேட்ட அறிஞர் பலர் இவ்வாராய்ச்சி நூலுருவாதலை விரும்பி எழுதி முடிக்கும்படி என்னைப் பணித்தார்கள். அப்பணியினை மேற்கொண்டு கரந்தைத் தமிழ்ச் சங்கத்து வெளியீடாகிய தமிழ்ப் பொழிலிலே, விக்கிரம ஆண்டு மாசித் திங்கள் முதலாகப் "பண்ணுந் திறனும்." "குழலும் யாழும்" "எண்ணும் இசையும்". "பாலைத்திரிபு,, "சுருதி வீணை" யென்னுந் தலைப்பெயர்களைத் தந்து இவ் வாராய்ச்சியினைத் தொடர்பாக எழுதிக் கொண்டு வந்தேன்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்து வெளியீடாகிய செந்தமிழ் பத்திரிக்கையிலும் "சங்கீத மகரந்தம்" "இசைக்கிரமம்"," எண்ணலளவை" என்னும் தலைப்பெயர்க் கீழ்ச் சில பொருளுரைகளை வெளியிட்டேன். அண்மையிலே

திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்திலே இருமுறையும், சென்னை நகர் ஒலிபரப்பு நிலையத்திலே ஒருமுறையும் இப்பொருள் பற்றிப் பேசினேன். "தமிழ்ப்பொழி"லிலும், "செந்தமிழ்"லும் வானொலிப் பேச்சுகளிலும் வெளியிட்ட, உரைகளும் கருத்துக்களும் இந்நூலிற் சேர்க்கப்பட்டன. சேர்த்துக் கொள்ள அனுமதித்த அதிகாரிகளுக்கு எனது நன்றியுரியது.

என்னை இப்பணியிலே பெரிதும் ஊக்கிய கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர் தமிழவேள், திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் இதன் நிறைவுப் பேற்றினைக் காணுமுன் பிரிந்து சென்றமையினை நினைக்கும் போது என்னுள்ளம் பெரிதும் துயருறுகின்றது. அவர்களது அன்புக் குரிய நிலையமாகிய இத்தமிழ்ப் பெருமன்றத்திலும், இதனைச் சார்ந் திருக்கும் அகத்தியர் திருமடத்திலும் இருந்து இந்நூலினை எழுதி முடித்தமை அவர்களது பிரிவினாலெய்திய மனத்துயரினை ஓரளவிற்கு நீக்கிவிட்டது.

ஆயிரம் ஆண்டுகளாக மறைந்து கிடந்த அருங்கலை நிதியத்தின் பெருமையினையும், அதனைத் தேடிக் காணப்புகுந்த எனது சிறுமை யினையும் ஒப்ப வைத்து நோக்கும் சான்றோர் என்னை எள்ளி நகையாடுதல் இயல்பேயாம். "வையமென்னை யிகழவும் மாசெனக் கெய்தவும்" இவ் வாராய்ச்சியினை யான் எழுதத் துணிந்தது, "பொய்யில் காட்சிப் புலமை யினோராகிய இளங்கோ வடிகள் தமிழ்த் தெய்வத்தின் திருவடிகளுக்கு அணியாகப் புனைந்தளித்த தெய்வமாக் கவியாகிய சிலப்பதிக்காரத்தின் மாட்சியினை என்னாலியன்றவரை உலகிற்குத் தெரிவிக்கும் பெருவிருப்பி னாலேயாம். இயற்றமிழ் நூல்களிலே பரந்து கிடக்கும் இசைநூன் முடிவு களை என்போன்ற தமிழ் மாணவர்கள் ஓரளவிற்கு உணர்ந்து கொள்ள இவ்வாராய்ச்சி உதவுமாயின், எய்தும் பயனும், பெறுதற்குரிய பேறும் அதுவேயெனக் கொண்டு உளமகிழ்வுறுவேன்.

தமிழ்நாடு செய்த தவப்பயனாகத் தோன்றிச் சங்கநூற் செல்வத் தைத் தமிழுலகிற் கீந்த அறிவுக்கொடைப் பெருவள்ளலும், பெரும் பேரா சிரியர், தென்னாட்டுக் கலைச்செல்வர் எழுத்தறி புலவர் என்னும் சிறப்புப் பெயர்களுக்குச் சிறப்பளித்த பெரும் புலவருமாகிய சாமிநாதையர் அவர்கள் சிலப்பதிகாரத்தினை முதன்முறையாக அச்சிட்டது 1892 ஆம் ஆண்டிலாகும். அந்த ஆண்டிலே யானும் பிறந்தேனாதலினாலே, பள்ளி யிற் படிக்குங் காலத்திலே, மூத்தோர் கையிலே அந்நூற் பிரதியிருக்கக் காண்பதும், என் கையினாலே அதனைத் தீண்டுவதும் எனக்குப் பேருவகை யினைத் தரும் செயல்களாக இருந்தன.

அஃதன்றியும், ஈழ நாட்டின் குணபாலிலே, என் முன்னோர்க்கு உறைவிடமாகிய காரேறு தீவிலே, கடல்சூழ் இலங்கைக் கயவாகுமன்னன் வழிவந்த மன்னர்களாலே நிறுவப்பட்ட பழமையான கண்ணகியார் கோயில் ஒன்று உளது. அதன் வழியாகவும் சிலப்பதிகாரத்தின் மீதுள்ள ஆர்வம் பெருகியது.

கொழும்பு மாநகரிற் கல்வி கற்கும் காலத்திலே, இலங்கையரசினாலே பெருமதிப்புப் பெற்ற கலைச்செல்வராகிய கைலாசபிள்ளை முதலியாரவர்களைச் சந்தித்துச் சிலப்பதிகாரத்தைப் பாடங்கேட்கும் பேற்றினைப் பெற்றேன். பரம்பரைக் கலைவாணர் குலத்திலே உதித்த முதலியாரவர்கள் பழைய இசை மரபு தவரு கம்பீரமான குரலிலே மங்கல வாழ்த்துப் பாடலினைப் பாடக் கேட்டது இன்னும் என் அகச்செவியிலே ஒலித்துக் கொண்டிருக்கிறது.

1924 ஆம் ஆண்டிலே, மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழாவிற் கலந்து கொள்ளவும் ''நாடகத் தமிழ்'' என்னும் பொருள்பற்றி ஒரு விரிவுரை செய்யவும் வசதியேற்பட்டது. சங்கத்துக் கௌரவ காரியதரிசியாராகிய திரு. TC. சீனிவாச ஐயங்காரவர்கள் அவ்விரிவுரையினை நூலுருவாக்கித் தரும்படி பணித்தார்கள். ''மதங்க சூளாமணி'' எனப்பெயரிட்டு எழுதிக்கொடுத்தேன். சிலப்பதிகாரத்திலுள்ள நாடக நூன் முடிபுகளை ஓரளவிற்கு விளக்குகின்ற அந்நூலினை சங்கத்தார் உவந்தேற்று வெளியிட்டார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலே, தமிழ்ப் பகுதித் தலைவராக இருந்த காலத்திலே, இசைப்பகுதிக் கல்வி முறையினையும் மேற்பார்வையிடும் கடமை ஏற்பட்டது. அக்காலத்திலே, தஞ்சைத் திருவாளர் க. பொன்னையா பிள்ளையவர்களிடம் கருநாடக சங்கீதமென இந்நாளில் வழங்கும் இசையினது அமைப்பினை ஓரளவிற்கு அறிந்து கொண்டு இவ்வாராய்ச்சியினைத் தொடங்கினேன்.

1936-ஆம் ஆண்டு, மாசித் திங்களிலே, பழந்தமிழரின் இசை, சிற்பம், கலையறிவு என்னும் பொருள் பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆதரவிலே ஆறு விரிவுரை செய்தேன். அவ்விரிவுரைகள் பல்கலைக் கழகத்துப் பட்டி மண்டபத்திலே (*Senate House*) ஆங்கில மொழியில் நிகழ்ந்தன. பிற மொழியாளர்களும் பலர் வந்து கேட்டார்கள். எல்லா விரிவுரைகளும் இந்து (*The Hindu*) என்னும் ஆங்கிலப் பத்திரிகையிலே வெளிவந்தன. அவற்றைக் கண்ட அறிஞர் பலர் ஆங்கிலத்திலே நூலுருவாக்கித் தரும்படி என்னைக் கேட்டார்கள். ஈழ நாட்டிலே

ஸ்ரீ இராம கிருஷ்ண சங்கத்துப் பாடசாலைகள் பதினேழினை நடத்தும் பொறுப்பு என் முழு நேரத்தையும் பற்றினமையினாலே, இசையாராய்ச்சி ஓரளவிற்குத் தடைப்பட்டு நின்றது.

பின்பு திருமடத்துப் பெரியோர்கள் இமயமலைச் சாரலிலுள்ள அத்துவைத ஆச்சிரமத்திற்குச் சென்று, ''பிரபுத்த பாரதா'' என்னும் ஆங்கில மாத வெளியீட்டினுக்கு ஆசிரியராகவிருக்கும்படி பணித்தார்கள். தமிழ்த்தொண்டு செய்தற்கு வேண்டிய வசதி இமயத்திலேற்பட்டது. மலைமக்களாகிய எம்பெருமாட்டியின் திருவருளினாலே இசையாராய்ச்சியும் ஒருவாறு நிறைவேறியது. வெளியிடுங் காலமும் வந்து கை கூடியது

எனது பிரிய நண்பரும் கோனூர் சமீன்தாரும் ஆகிய திருவாளர் பெ. ராம. ராம. சிதம்பரஞ் செட்டியார் அவர்கள் இந்நூல் சிறந்த முறையிலே வெளிவருவதற்காவன எல்லாஞ் செய்தார்கள். திருக்கொள்ளம்புதூர் திருப்பணிச் செல்வராகிய தந்தையாரைப் போல அறிவும், ஒழுக்கமும், அறம் வளர்க்கும் சிந்தையும் வாய்க்கப் பெற்ற இத்தமிழன்பர் சௌந்தரநாயகி சமேத வில்வ வனநாதருடைய திருவருளினாலே எல்லாநலன்களும் எய்தப்பெற்று நீடு வாழ்வாராக.

விபுலாநந்தர்

சித்திரபானு ஆண்டு
ஆனித் திங்கள்






எடுத்தற்கரிய மாபெரும் கற்றிருப்பணி
எடுத்திட்ட ஆண்டு, திருப்பணிச் செல்வர்களின்
பெயர் பெருமை கூறிநிற்கும் கல்வெட்டு
அம்பாள் சந்நிதி மேலே காணப்படுவது



நாவலமே கோலாக நற்பதிகம் பாடி
ஒடமேறிச் சென்ற ஞானசம்பந்தர்
இடபாரூடராக இறைவன் காட்சி தரக்காணல்
ராஜ கோபுரத்தில் உள்ள சிற்பத்தின் சிறப்பு



காட்சி தரும் இடத்தில் காணும் சம்பந்தரின் அருள் தோற்றம்
மேலக் கோபுர வாயிலின் மேலே காணப்படுவது.



கலையழகு மிக்க சோமாஸ்கந்தர்
மேல் விமானச் சுதை வேலைப்பாடுகள்.



தேவியருடன் திருமால்
மேல் விமானச் சுதை வேலைப்பாடுகள்



புராணக் கதைகள் தம்மைப் புகட்டியே நிற்கும்
பொலிவுமிக்க சுதைச்சிற்பங்கள்.



வில்வாரண்யேஸ்வரர் மேல்தள விமானத் தோற்றம்
படல் கோபுரம்



நடராஜ சபா மண்டபம்
மேல் விமானத் தோற்றம்



குடநீராட்டு விழாதன்னைக் காணவே
கூடி நிற்கும் அன்பர்கள் கூட்டம்
ராஜகோபுரத்தின் உச்சியில்
சிவாச்சாரியர்கள் ஆயத்த நிலையில்



நீராட்டல் செய்திடவே
நேரம் பார்த்து நிற்கும் சிவாச்சாரியர்கள்
சுவாமி கோபுர விமானம்



ஆச்சாரியார் வரவுக்கு ஆர்வமுடன் காத்திருக்கும்
அடியார்கள் கூட்டம்



அம்மையப்பன் அருள்பெற ஆங்காங்கு அமர்ந்துள்ள
மக்கள் திருக்கூட்டம்



தளம் மீது அமர்ந்து தவம் செய்வார் போல்
காண்கின்றார்
அருள் செய்வான் அவன் என்றே !
முகம் காட்டி முன்னால் நிற்பவர் கார்த்திகேய
ஸ்தபதியார்



நட்டமாடிய நம்பன் கோயில்
இட்டமுடன் லெ. வும் சித. வும் எடுத்த கலைக்கோயில்
வெட்டாற்றின் தென்கரையில் விளங்கும் எழிற்கோயில்
கொட்டமே கமழும் கொள்ளம் புதூர்க் கும்பாபிஷேகத்துடன்
குடநீராட்டுச் செய்யப் பெற்றது.

உ
சிவமயம்
ஸ்ரீ பொய்யாத விநாயகமூர்த்தி துணை

# சௌந்தர மகாலெட்சுமி

L. சோமு

''அன்னையே!
கண்களைப் பறிக்கும் காட்சி கவிந்த நின் வடிவம் போற்றி!
என்றும் என் நினைவில் நின்றாய் போற்றி!
முப்புவி ஈன்ற தாயே மோகனச் சிரிப்பின் செல்வி!
கைநிறை செல்வம் யாவும் கடைக் கணால் அருள்வாய் போற்றி!
மைவழி குவளைக் கண்ணாய் வரையிலாத் திருவே போற்றி!
பாதத்தில் சிரசை வைத்து பணிகின்றோம் போற்றி! போற்றி!! ''

என்ற என் ஆருயிர் நண்பர் அரசவைக் கவிஞர் கண்ணதாசன் அவர்களின் அருட்கவி உள்ளத்தைத் தொட்டு ஊடுருவி நிற்க, அதனை வடிவமாக்கி வழிபட என் உள்ளம் துடித்துக்கொண்டிருந்தது. ஆண்டவன் அருளால் அது நிறைவேறும் நன்னாளும் எனக்குக் கிடைத்தது. தமிழகத்தின் தலைசிறந்த சிற்பி நீலமேக ஸ்தபதியாரும் அவருடைய உதவியாளரும் அருட்கவியின் வடிவத்தை சிலையாக ஆக்கித் தந்தார்கள்.

இருளனைய கருங்குழலும் இளநிலவார் வெண்ணகையும்
எழிற் செவ்வாயும்
கருணைபொழி திருமுகமும் கணைவிழியும் பணைத்தோளும்
கமலக் கையும்
அருள் மலரும் அழகிய நம் நாயகியை
நினைந்து அகத்துள் வைப்பாம். - என்ற

சிறப்புக்குரிய ஸ்ரீ சௌந்தரநாயகி அம்பாள் கொள்ளம்பூதூரில் பல யுகங்களாய் ஆட்சி செய்து வந்த அதே இடத்தில், உள்ளத்தில் தோன்றி உருவமாய் ஆகி நின்ற மகாலெட்சுமியை அமைத்துவிட்டோம் பேரானந்தம் கொண்டு விட்டோம், உள் மண்டபத்திலேயே ஸ்ரீ சௌந்தரநாயகி அம்பாள் சமேத வில்வாரண்யேஸ்வரரும் சௌந்தர மகாலெட்சுமியும் அனைவரது இல்லங்களையும் காத்துச் செல்வமாக்கி இன்னருள் புரிவாய் என வேண்டிக் கொள்கிறேன்.

கொள்ளம்பூதூர் மக்களுக்கும். எங்கள் குடும்பத்தார்களுக்கும் பல யுகங்களாய் ஸ்ரீ சௌந்தரநாயகி அம்பாள் ஆட்சி செய்த இடம் புல் பூண்டாக இருந்து வருவது மனத்திற்கு மிகவும் சங்கடத்தை தந்து கொண்டிருந்தது. அக்குறையைப் போக்க எல்லோர் உள்ளமும் இசைவு தந்தது... 1979-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 17..ஆம் நாள்தான் அதனைச்

செயலாக்கும் பணியை என்னிடமும், பணம் தரும் பணியை எங்கள் குடும்ப மகளிரிடமும் என் அன்புச் சகோதரர்கள் ஒப்புவித்தார்கள். அது போல் ஒவ்வொருவரும் அவர்களுக்கு இட்டிருந்த பணிகளை நிறைவேற்று வதில் வேகத்தோடும், விறுவிறுப்போடும் ஈடுபட்டார்கள். என் அன்புச் சகோதரர்கள், ஐயாக்கள் (பாட்டனார்) இராமன்செட்டியார், லெட்சுமணன் செட்டியார் ஆகிய இருவருக்கும் எதிலும் இளைத்தவர்கள் இல்லை, ஒவ்வொருவரும் ஒவ்வொரு துறையில் சிறப்பும், திறமையும் மிக்கவர்கள், பெ. ராம குடும்பத்தினர் பெருமையையும், தர்ம சிந்தனையையும் விட்டுக் கொடுக்கும் பெருந்தன்மையையும் இன்றும் கடைபிடித்து வருகிறார்கள். இந்த நேரத்தில் இத் திருக்குட நன்னீராட்டிற்கு இசைந்து உழைத்த என் அன்புச் சகோதரர்களைப்பற்றி ஒருசில வார்த்தைகள் எழுதுவது என் கடமையாகும்.

கோவில் திருப்பணி வேலைகள் தொடங்கிய நாள் முதல் உயர்திரு சித. கணபதி அவர்களும் அன்புடன் நாங்கள் அழைக்கும் (மகா கணபதி) சே. கணபதி அவர்களும் பலதடவைகள் திருக்கொள்ளம்பூதூர் சென்று அங்கு நடைபெற்ற கோபுர வேலைகளை மேற்பார்வையிட்டு திட்டங்கள் வகுத்துக் கொடுப்பதில் கண்ணும் கருத்துமாய் பணியாற்றினார்கள். திரு சித. கணபதி அண்ணன் அவர்களும். பெ.ராம. சாஸ்வத தர்மகாரியங்களின் வளர்ச்சிகளிலும் அதிகம் ஈடுபட்டு உழைத்திருக்கின்றார்கள். அது அவர்களால் தான் முடியும். ஏனெனில் அனைவருடனும் இணைந்து, அனுசரித்து, அமைதியாகக் காரியங்களை நிறைவேற்றுவதில் திறமைமிக்கவர் அவர்கள் திரு சித. கணபதி அண்ணன் அவர்களும், சே. கணபதி அவர்களும் ஸ்ரீ சௌந்தரநாயகிஅம்பாள் சமேத ஸ்ரீ வில்வாரண்யேஸ்வரர் திருக்குட நன்னீராட்டையும் சிறப்பாக முடித்துவிட வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்தார்கள். அஷ்டபந்தன மருந்துகள் அனைத்தும் சித. கணபதி அண்ணன், ராம அண்ணன் ஆகியோர் மேற்பார்வையிலே தயாரிக்கப்பெற்றன.

நிலங்களில் வருமானம் இல்லாதகாரணத்தால் கடந்த 3, 4 ஆண்டுகளாக டிரஸ்ட்டின் நிதி நிலைமை மிக நெருக்கடியாக இருந்து வந்த இந்த நேரத்தில் பெ. ராம குடும்பத்தைச் சார்ந்த அனைவரும் மகிழ்ச்சியோடு திருக்குட நன்னீராட்டு செலவுக்குப் பொருள் உதவி செய்தது மிகவும் போற்றுதற்குரியது, கடந்த 9 மாதங்களாக திருக்குட நன்னீராட்டு விழா நடந்தசமயம் இடைஇடையே பணத் தட்டுப்பாடு ஏற்பட்டபோதெல்லாம் மாயாஜாலம் போல் திரு. சே. கணபதி அவர்கள் பொறுப்புடன் பணம் கொண்டுவந்து கொடுத்த அருமையை யாராலும் போற்றாமலிருக்க முடியுமா! பொருளாதாரப் பிரச்சனைகள் அனைத்தையும் உயர்திரு சித. கணபதி அவர்களும், சே. கணபதி அவர்களும் மிக நல்லமுறையில் நிர்வகித்தார்கள். அதேபோல் சென்ற ஆண்டு தர்ம காரியங்களை மேற்பார்வையிட்ட உயர்திரு பெ. ராம. லெ. ராம. அழகப்பன் அவர்கள்

ருபாய் 30,000 வரை கடனாகத் தந்திருப்பதும், திருக்குட நன்னீராட்டு விழாவில் ஏற்பட்ட பற்றுக் குறைகளுக்கும் சே. கணபதி அவர்கள் கடன் தந்திருப்பதும் பாராட்டுக்களுக்குரியன.

எங்கள் திருச்சி, மா. சம்பந்த அண்ணன் அவர்களிடம் ஒரே நேரத்தில் 10மகா கும்பாபிஷேக வேலைகளை வேண்டுமானாலும் ஒப்புவித்து யாகசாலைப் பொறுப்புகளை ஒப்படைத்தால் அமைதியுடனும் பொறுமையுடனும் அந்த காரியத்தைச் செய்து முடிப்பார்கள்.

பேரையூர் அம்பாள்குளம் ஸ்ரீ பொய்யாத விநாயக மூர்த்திக்கும் 1975 ஜனவரி 31-ந் தேதி நிகழ்ந்த திருக்குட நன்னீராட்டில் பெரும் பணி ஆற்றி பெருமை பெற்றிருக்கிறார்கள். அவர்களும் சித. கணபதி அவர்களும், கடகம்பாடி குருக்கள் ஐயாவிற்கு இணையாக ஆகம விதிப்படி திறமையுடன் செயலாற்றியது எங்கள் குடும்பத்திற்கே பெருமையைத் தருகிறது.

எங்கள் ராமண்ணன் அவர்களும் கும்பகோணத்திலிருந்து கொண்டு ஆற்றிய பணிகள் பற்பல. கலசங்கள் அனைத்தையும் கழற்றி, தன் மேற்பார்வையிலே தெளிவு எடுத்துப் புதுப்பித்து அவை ஒவ்வொன்றையும் தனித்தனியாக அடுக்கிப்பார்த்து திருப்தி அடைவார்கள். அவர்கள் பொறுப்பிலேயே கும்பகோணத்திலிருந்து ஆசாரிகளை அழைத்து வந்து கோபுரங்களில் பொருத்திய பெருமை அவர்களையும், அவர்கள் மகன் ராமுவையும், சித. நடராஜன் அவர்களையும் சாரும்.

திருக்குட நன்னீராட்டு நேரத்தில் என்ன அவசரத் தேவையாயிருந்தாலும் 'ராம' கடைக்குத்தான் டெலிபோன் செய்து காரியங்கள் நிறைவேறும். கணபதி அண்ணனவர்களுடன் சிவாச்சாரியார்களைத் தேர்ந்தெடுத்தது முதல் சமையலுக்கு ஆட்கள் கொண்டுவந்த வரை எல்லாச் சிறப்புகளும் அவர்களையே சாரும்.

தம்பி பெங்களூர் சே. நடராஜன் அவர்கள் தர்ம மேற்பார்வையில் திருக்குட நன்னீராட்டு நிகழ்த்த வேண்டுமென மிகவும் ஆர்வம் கொண்டு அதனை அருள் வாக்காகவும் சொல்லி எல்லோருடைய உணர்ச்சிகளையும் தூண்டிவிட்டார்கள். அவர்கள் ஆரம்பித்த அந்த நல்ல காரியம் சுபமுடன் இனிது நடந்தேறியது.

மதுரை திரு சே. பெருமாள் அவர்கள் மலேசியா காடை எஸ்டேட்டில் இருந்து வந்த காடை விநாயகரை கர்நாடகாவில் உள்ள அவர்கள் ஜாகிரிகான் எஸ்டேட்டில் பிரதிஷ்டை செய்த பெருமை அவர்களையே

சாரும். அவர்களும், அவர்கள் சகோதரர்களும் செட்டி நாட்டிலிருந்து சிவாச்சாரியார்களை அழைத்துப் போய் வெகு விமரிசையாக கணபதி ஹோமம் நடத்தி வருகிறார்கள். திரு. பெருமாள் அவர்கள் தர்மம் செய்வதில் எங்களை எல்லாம் முந்திக்கொண்டு விட்டார்கள், நற்சாந்து பட்டியில் நடு ஊரில் மிக அசிங்கமாக இடிந்து கிடந்த சின்னப் பள்ளிக் கூடத்தைக் கட்டும் பெரும்பணியைஏற்று வேலைகள் நடந்து வருகின்றன.

நான் நற்சாந்துபட்டியில் ஐயப்பன் கோவில் கட்டுவதற்காகப் பெருமாள் கோவிலுக்கு பின்புறம் இடம் வாங்கி வைத்திருக்கிறேன். வேலைகளைத் தொடங்கும் நன்னாளை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். நற்சாந்துபட்டியில் திருப்பணி செய்வதில் திரு. பெருமாள் அவர்கள் முந்திக்கொண்டார்கள். திரு. பெங்களூர் நடராஜன் அவர்களும் நற்சாந்துபட்டியில் பாலிடெக்னிக் கட்டுவதற்காகப் பெரும் தொகை தருவதாக இசைவுதந்து அரசாங்கத்தின் அனுமதிக்காக காத்திருக் கிறார்கள்.

திருக்குட நன்னீராட்டில் பசிக்கு உணவு அளித்த பெருமை அனைத்தும் உயர்திரு சே. கணபதி அவர்களையே சாரும். திறமை மிக்கவர்களைக்கொண்டு சிறப்பாக பணியை செய்து முடித்தார்கள். பசிக்கு அண்ணன் சே. கணபதி உணவளிக்க அவர்களுடன் போட்டி போட்டுக்கொண்டு செவிக்கு உணவளித்த பெருமை திரு சே. கருப்பையா அவர்களையும், மா. காசி அவர்களையும், அண்ணன் ராம. அவர்களையும், சித. கணபதி அவர்களையும் சாரும். மகாபலிபுரத்தில் இருந்து கொண்டு வரவேண்டிய மகாலெட்சுமி சிலையை லெட்சுமி சீவல் சுப. அவர்கள் தந்த புது வேனில் பறந்துபோய் 12 மணி நேரத்தில் எடுத்து வந்த பெருமை உயர்திரு சே.கருப்பையா அவர்களையும், மா. காசி அவர்களையும் சாரும். அண்ணன் சித. வி. அவர்கள், அவர்களுடைய பார்வையில் கடந்த ஒரு ஆண்டாக ஆற்றிஇருக்கும் பணி மிகவும் போற்றுதற்குரியது. டிரஸ்ட்டின் பணநெருக்கடியைத் தவிர்க்க தன்முழுமுயற்சியால் பலமுறை திருக்கொள்ளம்பூதூர் சென்றதும் பண்ணை நிலங்களின் வருமானத்தை பெருக்கியதும், பழைய பாக்கிகளை வசூல் செய்ததும் யாராலும் மறக்க வோ, மறுக்கவோ முடியாது. தன் பார்வையில் கடுமையாக உழைத்து பெரும் பேற்றினைப் பெற்றார்கள். கோவில் மராமத்து வேலைகள் நடந்த சமயம் சோம. கணேசன் அவர்களும். மு. கணபதி (நல்ல கணபதி) அவர் களும், சே. அழகப்பன் அவர்களும் சித. வி அவர்களும். சுப. கணேசன் அவர்களும். ம. ராமு அவர்களும் எனக்கு மிகவும் உதவியாக இருந்து நற்பணி ஆற்றினார்கள்.

அன்புத்தம்பி சேலம் திரு. சித. நடராஜன் அவர்கள் அனைவருக்கும் பத்திரிக்கை அனுப்பும் பணியை சிறப்புறச் செய்து முடித்தார்கள். என் னுடன் கோவையில் நான்கு நாட்கள் இருந்து திருக்குட நன்னீராட்டு மலர் வேலைகளை உருவாக்குவதற்கும், தொகுப்பதற்கும் வகைப்படுத்து

வதற்கும் பூரண ஒத்துழைப்பு தந்தார்கள். எங்கள் குடும்பத்தில் அவர்கள் சிறந்த எழுத்தாளர் என்று சொல்ல என் உள்ளம் பெருமையடைகிறது.

கோவில் மராமத்து வேலைகளும் மகாலெட்சுமிகோவில் வேலைகளும் நடைபெற்ற சமயம் S K மீனாட்சிசுந்தரம் அவர்கள் நிர்வாக அதிகாரியாக இருந்தது எங்கள் அதிர்ஷ்டமே. திரு S K மீனாட்சிசுந்தரம் அவர்கள் மிகவும் தெய்வபக்தி உடையவர்கள். எல்லோருடனும் அன்போடும், பண்போடும் பழகும் ஆற்றல் மிக்கவர்கள். மராமத்து வேலைகள் நடந்த சமயம் அருகிலேயே இருந்து கொண்டு அவ்வப்போது ஏற்படும் பிரச்சனைகளைத் தீர்க்க முன்நின்று ஒத்துழைப்புத் தந்தார்கள்.

கோவில் தலையாரி நடராஜன், பெ. ராம டிரஸ்ட் தலையாரி பாவாடை அவர்கள் ஆகிய இருவரையும் இங்கு நினையாமல் இருப்பது முடியாது. நினைத்த நேரமெல்லாம் நான் நினைத்தபடி கேட்ட பொருள்களை எல்லாம் கொண்டுவந்து குவித்தார்கள். மராமத்து வேலைகளில் பாவாடையின் பணி போற்றுவதற்குரியது.

திருவுலாக் காட்சிக்கு எழுந்தருளச் செய்வதற்குத் தேவையான சாமான்களுக்காகவும், யாகசாலைக்கு தேவையான சாமான்களுக்காகவும் திரு சூரி அவர்களும், திரு நடராஜனும் எங்கள் MSL 844 டிரைவர் கஸ்பாரும் காரை எடுத்துக் கொண்டு ஒரு நாள் முழுவதும் அப்பகுதி கோவில்கள் அனைத்தையும் சுற்றி வளைத்து பொருள்களைக் கொண்டுவந்து குவித்தார்கள்.

திருக்கொள்ளம்பூதூர் பெருமக்கள் அனைவரும் எங்கள் ஐயா காலம் முதல் இன்று வரை எங்கள் குடும்பத்தாருடன் அன்போடும், அருமையோடும் பழகி மென்மேலும் எங்களைப் பெருமைப்படுத்தி வருகிறார்கள் திருக்குட நன்னீராட்டு மராமத்து வேலைகள் நடந்தசமயத்தில் தினமும் காலையும் மாலையும் எங்களுடன் வந்து இணைந்து பணியாற்றிய சின்ன ஐயா தியாகராஜ முதலியார் அவர்களையும், நடராஜ் முதலியார் அவர்களையும், கோபி அய்யங்கார் அவர்களையும் போற்றுவது என்னுடைய கடமையாகும்.

ஊரோடு திரண்டு வந்து கொள்ளம்பூதூர் முழுவதிலும் மண்டிக் கிடந்த செடிகளையும், புதர்களையும் சுத்தம் செய்த காட்சிகளையும், அதனை அருகிலிருந்து கொண்டே தியாகராஜ முதலியாரவர்கள், நடராஜ முதலியாரவர்கள், ரவி அவர்கள், முத்து முதலியார் அவர்கள் ஆகியோர் மேற்பார்வையிட்டதும் என் மனத்தில் நீங்காத நினைவாக இருந்து வருகிறது

இடைக்காலத்தில் கோவில் நிர்வாகங்கள் அலுவல்கள் தடைபட்ட நேரங்களில் தன் செலவிலேயே அபிஷேகங்கள், அடிக்கடி எண்ணெய் காப்புகள் முதலியன செய்வித்த உயர் திரு சின்ன ஐயா தியாகராஜ முதலியார் அவர்களுடைய திருப்பணிகளை யாரும் மறக்க முடியாது. எப் பதவி ஆசையும் இல்லாமல் திருக்கொள்ளம்புதூர் ஊரார்கள் கோவில் திருப்பணிகளுக்குச் செய்து வரும் நற்பணிகளுக்கு நாம் என்றென்றும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். கோவில் சிப்பந்திகளும் நடராஜக் குருக்கள் அவர்கள் மகன் பிச்சைக் குருக்கள் அவர்களும், கிட்டு ஐயா அவர்களும் தினமும் இரவு 9-மணிக்கு அர்த்தசாமம் முடிந்ததும் அப்பம் கொண்டுவரும் புது சுயம்பாக அய்யர் அவர்களும் எங்கள் பெ. ராம. குடும்பத்தில் எல்லாரிடத்திலும் எப்போதும் விசுவாசமாக இருந்து வருவது என்றென்றைக்கும் பாராட்டுக் குரியது.

திருக்குட நன்னீராட்டில் பெ. ராம. குடும்ப மகளிரும் எங்களுக்கு சளைத்தவர்கள் இல்லை. சௌந்தர மகாலெட்சுமி கோவிலுக்கு பணம் கொடுத்ததுடன் இல்லாமல், மா. சிகப்பி ஆச்சி அவர்களும், சோம-மீனி ஆச்சி அவர்களும், கண. உமையாள் ஆச்சி அவர்களும், அண்ணன் ராம. அவர்களும், திருக்குட நன்னீராட்டுக்கு மிகவும் குறைந்த விலையில் மளிகைச் சாமான்களைச் சேகரித்து வாங்கிச் சுத்தம் செய்ததற்கு நன்றி சொல்வது எங்கள் கடமை.

22—5—79 காலைதான் மகாபலிபுரம் சென்றேன். 7.30 மணிக்கே பூம்புகார் கல்பட்டறைக்குப் போய்விட்டேன். கல்பட்டறைப் பணியைத் தொடங்க ஒவ்வொருவராய் வந்துக் கொண்டிருந்தவர்களும், செட்டிநாட்டைச் சேர்ந்தவர்கள் என்பது பெரும் மகிழ்ச்சியைத் தந்தது. அவர்களின் காய்த்திருந்த கைகளை பார்த்து பார்த்து உள்ளம் நெகிழ்ந்தது. மெதுவாக அவர்களுடன் பேச ஆரம்பித்தேன். நான் செட்டிநாட்டைச் சேர்ந்தவன் என்றதும் அவர்களுக்கெல்லாம் ஒரே மகிழ்ச்சி. பேச்சில் அவர்கள் சொன்ன ஒரு விபரம் என் எண்ண வேகத்தை குறைப்பதாய் இருந்தது நான் அவர்களிடம் ஒரு 5 அடி சிலையை உருவாக்க எவ்வளவு காலமாகும் என்று கேட்டேன். அவர்கள் சுமார் 3 மாதம் ஆகும் என்றார்கள். அப்போதே எனக்கு வேகம் சற்று தணிந்தது. 8 மணிக்கு நீலமேக ஸ்தபதி அவர்களும் வந்துசேர்ந்தார்கள், நான் நற்சாந்துபட்டி என்றதும் அவர்களுக்கும் ஒரே மகிழ்ச்சி. ஏனெனில் அவர்கள் ஆறு வயதில் உளிபிடிக்க ஆரம்பித்ததே எங்கள் ஊரைச்சார்ந்த கோவில்பட்டியில்தானாம் பிறகு இருவரும் உறவாடினோம். உரையாடினோம்.

என் எண்ண அலைகளை எடுத்துச் சொன்னேன். அவர்கள் காலம் மிக குறுகியதாக இருக்கிறதே என்று தயங்கினார்கள். ''நாங்கள் என்ன செய்வது இரண்டு மாதங்களுக்கு முன்பே நானும் சித. கணபதியண்ணன்

அவர்களும் இங்கு வந்தோம். தாங்கள் வட நாட்டிற்குப் போய்விட்டீர்கள்'' என அவர் மீது குறையை சுமத்தி என் கட்சியை பலப்படுத்தி, பிறகு வெற்றியும் கண்டு அவர்களை ஒருமாத காலத்தில் சிலையை உருவாக்கித் தரும்படி கோர அவர்களும் சம்மதித்தார்கள். நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே அவர்கள் உதவியாளர் மேற்படி சிலைக்கு உரிய கற்களைத் தேர்ந்தெடுத்து எனக்கு முன்பே கொண்டு வந்ததும் என் உள்ளம்மிகவும் உவகை கொண்டது. மகாலெட்சுமி சிலையை உருவாக்கும் பணியை அவர்களிடம் ஒப்படைத்து ஒரு மாத காலத்திற்குள் தரவேண்டு மென உறுதியும் வாங்கிக்கொண்டு அன்று இரவே கும்பகோணம் வந்து சேர்வதற்கும், திருக்கொள்ளம்பூதூரில் இருந்து சித. கணபதி அண்ணன் சே. கணபதி அவர்களும், ராமண்ணன் அவர்களும் அங்கு வந்து சேர்வதற்கும் சரியாக இருந்தது.

நான் விபரங்களைச் சொல்லி, மறு நாள் காலையிலேயே திருக்கொள்ளம்பூதூருக்கு அனைவரும் மறுபடி சென்றோம். அங்கு இரண்டாம் பிராகாரத்தில் சோழர் காலத்தில் கட்டப்பெற்று தரை மட்டமாய் இடிக்கப்பெற்ற சௌந்தரநாயகி அம்பாள் இருந்த மண்டபம் இடத்தை தேடும் முயற்சியில் ஈடுபட்டோம். காலையிலிருந்தே இட ஆராய்ச்சி தொடங்கியது. கோவில் பழைய மெய்காவல் சௌந்தரராஜனை அழைத்துவந்தோம். செல்லூர் கோபி அய்யங்கார், இராகவ அய்யங்கார் அவர்களை அழைத்து வரச்சொன்னோம். எல்லாரும் அலைமோதிக் கொண்டிருக்கும்போது நடராஜ குருக்கள் அவர்களும் (தற்சமயம் வெளி ஊரில் இருப்பவர்கள்) தற்செயலாக அங்கு வந்து நின்றதைப் பார்த்ததும் எல்லாருக்கும் ஒரே மகிழ்ச்சி. எல்லாருமாக சேர்ந்து இடத்தை முடிவு செய்து வாணம் வெட்ட ஆரம்பிக்கச் சொல்லி முகூர்த்தம் செய்யும் பொறுப்பை எங்கள் கும்பகோணம் ராமண்ணன் அவர்களிடம் ஒப்படைத்து மறுபடி நான்கு தினத்தில் திருக்கொள்ளம்பூதூர் போய் சேர்ந்தோம். அங்கு Basement காங்கிரிட் போட 1½'' மெட்டல் புதுக்கோட்டையிலிருந்துதான் கொண்டுவரமுடியும் என்றார்கள். நமக்கு தேவையோ கொஞ்சம் இதற்கு ஏன் அவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்வது உடனே 42 ஆண்டுகளுக்கு முன்பு கல் திருப்பணி நடந்த காலத்தில் சிதறிக்கிடந்த கற்களையெல்லாம் ஒன்று சேர்க்கச் சொல்லி 4, 5 ஆட்களை சுத்தியலுடன் அமரச்சொல்ல - காங்கிரீட்டிற்கு மெட்டல் தயாரானது. ஒரே வேகம், என் ஆர்வத்திற்கும் பாவாடை ஸ்தபதி கார்த்திகேயன் - மேற்படியார் சித்தப்பா அப்பு ஆகியோர்கள் முழு முயற்சியுடன் ஒத்துழைப்பு தந்தார்கள். வண்டி வண்டியாக செங்கல்! வண்டி வண்டியாக மணல்! வண்டி வண்டியாக ஆட்கள்! கோபி அய்யங்கார் சின்ன அய்யங்கார் தியாகராஜ முதலியார் அவர்கள், நடராஜ முதலியார் அவர்கள் உதவி செய்யக் கட்டிடம் கோபுர மட்டம் வெகு வேகமாக உயர்ந்தது. என் அன்புச்சகோதரர் சே. கணபதி அவர்கள் நான் கேட்கும் பொருட்களையெல்லாம் நாகையில் இருந்தும் கும்பகோணத்திலிருந்தும் தங்குதடையின்றி கொண்டுவந்துகுவிப்பார்கள்

அவர்கள் நாகைக்கும் கும்பகோணத்திற்கும் போகாத நாளே இருக்காது. ஒரே சிந்தனே, ஒரே எண்ணம்! ஒரே வேகம்! மராமத்து வேலேகளும், மகாலெட்சுமி கோவில் வேலேகளும் ஸ்தபதி கார்த்திகேயன் முழுவேக ஒத்துழைப்புடன் நல்லவிதமாக நிறைவேறின. ஆற்றங் கரையில் அள்ளி நிரப்பி இருந்த மணல் அனேத்தையும், மூன்று மணி நேரத்திற்குள் கொள்ளம்பூதூர் கொண்டுவந்து சேர்த்த A. ராஜமாணிக்கம் செட்டியார் அவர்கள் எனக்கும் விளம்பர வேலேகள் மேற்பார்த்த அண்ணன் ராம அவர்களுக்கும் மிக உதவியாக இருந்தார். தம்பிகள் காசி, கருப்பையா 25-6-79 காலே மகாபலிபுரத்திலிருந்து கொண்டுவந்த மகாலெட்சுமி சிலேயை காலே 5 மணிக்கு மேளதாளத் துடன் திருக்கொள்ளம்பூதூர் பெருமக்கள் ஒன்றுதிரள ஊர்வலமாக ஸ்ரீ சௌந்தரநாயகி சமேத ஸ்ரீ வில்வாரண்யேஸ்வரர் திருக்கோயிலே அனேவரும் வலம் வந்து சௌந்தர மகாலெட்சுமியை கோவிலுக்குள் கொண்டுவந்து எண்ணெய்க் காப்பிட்டு ஆகம விதிப்படி கடகம்பாடி குருக் கள் ஐயர் தலேமையில் தானிய வாசம் செய்வித்து அனேவரும் மகிழ்வுடன் கலந்து கொண்டோம். அன்று திருப்பணி வேலேகளில் ஈடுபட்டு அன்று இரவு கோவையில் என் மனேவி மக்களே அழைத்துக் கொண்டு மறுநாளே திரும்பி வர திட்டமிட்டு கோவைக்கு பறந்து வந்தேன்.

நான் இன்னும் இரண்டு மூன்று திருக்கோவில்கள் திருப்பணி செய்யத் திட்டமிட்டு இருக்கிறேன். அவைகளே வெற்றியுடன் நிறைவேற்றி திருக்குட நன்னிராட்டில் கலந்து கொள்ளும் பேற்றினே நாங்கள் வணங்கும் ஸ்ரீ பொய்யாத விஞயக மூர்த்தியும், ஸ்ரீ சௌந்தர நாயகி அம்பாள் சமேத ஸ்ரீ வில்வாரண்யேஸ்வரரும், ஸ்ரீ சௌந்தர மகாலெட்சுமியும், நான் வணங்கும் ஐயப்பனும் எனக்கு தருவார்கள் என்று முழுதும் நம்புகிறேன்!

உ
சிவமயம்
ஸ்ரீபொய்யாத விநாயக மூர்த்தி துணை

# அழகு நாச்சியார் அருள்வேட்டல்

மா. சம்பந்தம் செட்டியார், B. Com.



போற்றி வணங்கிட பொய்யாத விநாயகனை
ஈன்றெடுத்து எமக்கீந்த உமையவளே
அன்னை தாயே அருள்மிகு நாயகியே
இன்பம் தருபவளே இனிய முகத்தாளே
கல்வி தருபவளே காட்சி கொடுப்பவளே
செல்வம் தருபவளே சீராக வைப்பவளே

கதிரவன் ஒளியில் கலசங்கள் பளிச்சிட
வேதம் ஒலித்திட மேளங்கள் முழங்கிட

யானை மணியோடு ஆடி அசைந்துவர
பாலகர் பலபேர் பாக்கள் பாடிவர
கோலாகலமாய் ஐயர் குடங்கள் கொண்டுவர
ஆடவரும் பெண்டிரும் ஆனந்தமாய்க் கண்டுவர
அதிர்வேட்டு போட்டு அனைவரையும் அழைத்துவர
தேவரெல்லாம் பூமாரி தெளிவாகப் பொழிந்துவர
தேவாரம் பாடிவர ஆலவட்டம் ஆடிவர

எங்கள் குலதெய்வமே தேவியே உனக்குக்
குறித்த நேரமதில் குடமுழுக்கு செய்து வைத்தோம்
ஞாலம்புகழ நயம்படச் செய்து வைத்தோம்
எங்கள் மகளிர் ஈந்திட்ட செல்வத்தால்
உனக்கு நிகராக உற்றதொரு தோழியாக
இலக்குமிக்கு ஒருகோயில் இணையாகக்கட்டி வைத்தோம்
அன்னைக்கும் குடமுழுக்கு அழகாக செய்து வைத்தோம்
ஐயாக்கள் செய்த தர்மம் அனைத்தையும்
அணுப் பிசகாது அப்படியே செய்திடுவோம்

சந்தனக் காப்பிட்டு ஜரிகைப் பொட்டிட்டு
வெள்ளிக் கவசமிட்டு நேர்நின்று பார்க்கையிலே
உள்ளம் குளிருதம்மா உவகை கொள்ளுதம்மா

புன்னகை முகத்திலே புவனம் தெரியுதம்மா
செம்பவள வாயிலே சிரிப்பு இருக்குதம்மா
செங்கமலக் கண்ணே கருணை புரியுதம்மா

உற்ற தோழியரே உம்மை மகிழ்விக்க
நாளுமொரு நாதசுரம் நயமாக ஒலிக்க வைத்தோம்
இரவு நேரமதில் இன்னிசை பாடவைத்தோம்
எழில்மிக்க மங்கையரே நீவிர் எங்கள்
பெ..ராம. குடும்பம் பெருமையுடன் வாழ
சீருடன் வாழ சிறப்புடன் வாழ
மகிழ்வுடன் வாழ நல்ல மாண்புடன் வாழ
நலம்தரும் நங்கையரே அருள்புரிவீர் தேவியரே!



# முத்தான முத்தல்லவோ

PR. லெட்சுமணன்

வட்டமான அந்த அழகுமுகத்தில் வண்ணக் குங்குமப் பொட்டிட்டு விளங்கும் அழகான வசீகரத்தோற்றம். எண்ணம் இனிக்கப் பேசும் சுபாவம். எளிமையாக எல்லோருடனும் கலந்துரையாடும் இயல்பு. சபையிலே வந்து நின்ருல் சபைக்கு ஒரு பெருமிதம் எண்ணத்தில் என்றும் இளமை துள்ளும் உற்சாகம். இவற்றின் மொத்த உருவம்தான் எங்கள் முத்துச் செட்டியார்

வாழ்ந்த காலங்கள் கொஞ்சம் தான் என்ருலும் அனை வரின் நெஞ்சங்களிலும் நீங்கா இடம் பெற்று விட்டார்கள். அனைவராலும் செல்லமாக 'முத்து' என்றே அழைக்கப்பட்டார்கள். எண்ணி இரண்டு நிமிடங்களில் யாவருடனும் அந்நியோன்னியமாய்ப் பழகி விடுவார்கள்.

உள்ளத்தில் குழந்தை. ஊர் மொத்தத்தையும் நம்பி விடுவார்கள். எதிர்ப்போரும், எதிர்த்து இடுக்கண் செய்தோரும் பின்னர் அவற்றை விடுத்து அடுத்துக் கூடிடுவார்கள் அன்னவரின் பண்பு கண்டு.

பலருக்கும் பல்வேறு சமயங்களில் பயனுள்ள உதவி புரிந்துள்ளார்கள். எப்போதும் எல்லோரும் நல்மகிழ்ச்சியிலேயே இருக்கவேண்டும் என நினைப்பவர்கள்.

உ
சிவமயம்

ஆதி சங்கரர் பால வயதில் அருளிய "கனகதாரா" ஸ்தோத்திரத்தை, அரசவைக் கவிஞர், நண்பர் **கண்ணதாசன்** அவர்கள் தமிழில் கவியாக பயன்பெறத் தக்க வகையில் நமக்கு தந்திருக்கிறார்கள். தேன்சொட்டும் இப்பாக்களை தினமும் பாராயணம் செய்தால் தன்னிகரற்ற அன்னை இலக்குமியின் அருள் கைகூடும்.

வானதி பதிப்பகத்தில் கனகதாரா ஸ்தோத்திரங்களும் அதன் கருத்துக்களும் "**பொன் மழை**" என்ற புத்தகமாக அனைவரும் படித்துப் பயன் பெறத்தக்க வகையில் வெளிவந்திருக்கின்றன.

**வானதி பதிப்பகத்தார்**
அவர்களுக்கு



எங்கள் நன்றி.

கவிஞர் கண்ணதாசனின்

# பொன்மழைப் பாடல்கள்

மாலவன் மார்பில் நிற்கும்
  மங்கலக் கமலச் செல்வி!
மரகத மலரில் மொய்க்கும்
  மாணிக்கச் சுரும்பு போன்றாய்

நீலமா மேகம் போல
  நிற்கின்ற திருமா லுந்தன்
நேயத்தால் மெய்சி லிர்த்து
  நிகரிலாச் செல்வம் கொண்டான்

மாலவன் மீது வைத்த
  மாயப்பொன் விழி இரண்டை
மாதுநீ என்னிட த்தில்
  வைத்தனை என்றால் நானும்

காலமா கடலில் உந்தன்
  கருணையால் செல்வம் பெற்று
கண்ணிறை வாழ்வு கொள்வேன்
  கண்வைப்பாய் கமலத் தாயே! 1

நீலமா மலரைப் பார்த்து
நிலையிலா தலையும் வண்டு
நிற்பதும் பறப்ப தும்போல்
நின்விழி மயக்கம் கொண்டு

கோலமார் நெடுமால் வண்ணக்
குளிர்முகம் தன்னைக் கண்டு,
கொஞ்சிடும், பிறகு நாணும்
கோதையார் குணத்தில் நின்று,

ஏலமார் குழலி அந்த
இருவிழி சிறிது நேரம்
என்வசம் திரும்பு மாயின்
ஏங்கிய காலம் சென்று

ஆலமா மரங்கள் போல
அழிவிலாச் செல்வம் கொண்டு
அடியவன் வாழ்வு காண்பேன்
அருள்செய்வாய் கமலத் தாயே! 2

'மந்திரம் உரைத்தாற் போதும்
மலரடி தொழுதாற் போதும்'
மாந்தருக் கருள்வேன் என்று
மலர்மகள் நினைத்தால் போதும்

இந்திர பதவி கூடும்;
இகத்திலும் பரங்கொ ண்டாடும்;
இணையறு செல்வம் கோடி
இல்லத்தின் நடுவில் சேரும்!

சந்திர வதனி கண்கள்
சாடையிற் பார்த்தாற் போதும்
தாய்விழி பட்ட கல்லும்
தரணியில் தங்க மாகும்!

எந்தவோர் பதவி வேட்டேன்!
    எளியனுக் கருள்செய் வாயே!
இகத்தினில் செல்வம் தந்து
    இயக்குவாய் கமலத் தாயே!

நற்குடிப் பிறந்த பெண்கள்
    நாயகன் தனைப்பார்த் தாலும்
நாணத்தால் முகம்பு தைத்து
    நாலிலோர் பாகம் பார்ப்பார்!

பற்பல நினைத்த போதும்
    பாதிக்கண் திறந்து மூடி
பரம்பரை பெருமை காப்பார்!
    பாற்கடல் அமுதே! நீயும்

அற்புத விழிக ளாலே
    அச்சுத முகுந்தன் மேனி
அப்படிக் காண்ப துண்டு!
    ஆனந்தம் கொள்வ துண்டு;

இப்பொழு தந்தக் கண்ணை
    என்னிடம் திருப்பு தாயே!
இருமையும் செழித்து வாழ
    இகத்தினில் அருள்வாய் நீயே!

மதுஎனும் பெயரில் வாழ்ந்த
    மனமிலா அரக்கன் தன்னை
மாபெரும் போரில் வென்ற
    மாலவன் மார்பி லாடும்

அதிசய நீல மாலை
    அன்னநின் விழிகள் கண்டு
அண்ணலும் காலந் தோறும்
    ஆனந்தம் கொள்வ துண்டு!

பதுமநேர் முகத்தி னாளே!
    பதுமத்தில் உறையும் செல்வி!
பாற்கடல் மயக்கும் கண்ணை
    பதியின்மேற் பாய்ந்த கண்ணை

பேர்த்தெடுத் தென்மேல் வைத்தால்
    பிழைப்பன்யான் அருள்செய் வாயே,
பேரருள் ஒருங்கே கொண்ட
    பிழையிலாக் கமலத் தாயே!

கைடப அரக்கன் தன்னை
    கடிந்தநின் கணவன் மார்பு
கார்முகில் என்னத் தோன்றி
    கருணைநீர் பொழியுங் காலை,

மைதவழ் மார்பில் வீசும்
    மயக்குறும் மின்னல் ஒன்று!
மயங்குவன் திருமால், பின்னர்
    மகிழ்வன்நின் விழிதா னென்று!

செய்தவப் பிருகு வம்சச்
    சேயெனப் பிறந்து எங்கள்
திருவென வளர்ந்த நங்காய்!
    தினமும்யாம் வணங்கும் கண்ணாய்!

கொய்தெடு விழியை என்மேல்
    கொண்டுவந் தருள்செய் வாயே!
கொற்றவர் பணிகள் செய்யும்
    கோலமார் கமலத் தாயே!

    போரினில் அரக்கர் கூட்டம்
புறங்கண்ட நெடியோன் தன்னை
    போரின்றிக் குருதி யின்றிப்
    புறங்காணத் துடித்து வந்த

எத்தனை பேர்க்குக் கிட்டும்
இறையருள் ஆன்மா சாந்தி!
இகமெனும் கடலில் வீழ்ந்து
எவர்பிழைத் தார்கள் நீந்தி?

தத்துவப் படியே யாவும்
தலைமுறை வழியே கிட்டும்!
தவமெனும் முயற்சி யாலே
பலவினை தணந்து போகும்!

அத்தனை முயற்சி என்ன
அன்னைலமா தேவி கண்ணில்
அருள்மழை வந்தாற் போதும்
அகம்புறம் முக்தி யாகும்!

இத்தனை சொன்ன பின்பும்!
இன்னுமா தயக்கம் தாயே!
இல்லத்தைச் செல்வ மாக்கி
இன்னருள் புரிவாய் நீயே!

ஆக்கலும் அழித்தல் காத்தல்
அருள்நிறை இறைவன் சக்தி!
அன்னவன் தோளில் நீயே
அனைத்துமாய் விளங்கும் சக்தி!

ஆக்கலில் வாணி யாவாய்
அளித்தலில் திருவாய் நிற்பாய்;
அழிக்கின்ற வேளை வந்தால்
அந்தமில் துர்க்கை யாவாய்!

தீக்கொண்ட கரத்து நாதன்
திருப்பரா சக்தி யாக
திரிபுரம் ஏழு லோகம்
திருவருள் புரிந்து நிற்பாய்!

வாக்குயர் கமலச் செல்வி
வாடைநீ, தென்றல் நீயே!
வளமென இரப்போர்க் கெல்லாம்
வந்தருள் புரிகின் ருயே!

வேதத்தின் விளேவே போற்றி!
விணப்பயன் விளேப்பாய் போற்றி!
சீதத்தா மரையே போற்றி!
செம்மைசேர் அழகே போற்றி!

கோதைப்பண் புடையாய் போற்றி!
குளிர்ந்தமா மழையே போற்றி!
ஓர்தத்து வத்தில் நிற்கும்
உமையவள் வடிவே போற்றி!

பாதத்தைக் கமலம் தாங்க
பல்லுயிர் காப்பாய் போற்றி!
நாதத்து நெடியோன் கொண்ட
நங்கைநீ போற்றி! போற்றி!

பாதத்தில் சிரசை வைத்துப்
பணிகின்றேன் போற்றி! போற்றி!
மாதத்தில் ஒருநாள் கூட
மறந்திடாய் போற்றி! போற்றி!

அன்றலர் கமலம் போன்ற
அழகிய வதனி போற்றி!
அலேகடல் அமுத மாக
அவதரித் தெழுந்தாய் போற்றி!

குன்றிடா அமுதத் தோடு
கூடவே பிறந்தாய் போற்றி!
குளிர்ந்தமா மதியிேைடும்
குடிவந்த உறவே போற்றி!

மாரனை வணங்கு வித்த
வாளெது கமல நங்காய்?
மங்கைநின் விழிக ளன்றோ
மாலவன் தன்னை வென்ற!

தேரிய மாரன் உன்னைத்
தேரெனக் கொண்ட தாலே
திருமலை வெங்க டேசன்
திறத்தினை வென்றான் அன்றோ!

கூரிய விழியாய் உன்றன்
குறுவிழி தன்னை என்பால்
கொண்டுவந் தால்யான் உய்வேன்
கொடுத்தருள் கமலத் தாயே!

நீருண்ட மேகக் கண்கள்;
நிழலுண்ட கரிய கூந்தல்;
நேர்கொண்ட மாந்தர் வீட்டில்
நிலைகொண்ட செல்வப் பந்தல்!

சீர்கொண்ட அமுதச் செல்வி
சில்லென்ற காற்றுப் பாய்ந்தால்
சேர்கின்ற மேகத் தண்ணீர்
சிதறுண்டு பாய்வ தைப்போல்

வேர்கொண்ட பாவ மேனும்
வினைகொண்ட பாவ மேனும்
வேய்கொண்ட தோளி னுய்உன்
விழிகண்டால் தீர்ந்து போகும்!

தேர்கொண்டேன் புரவி இல்லை!
செல்வமாம் புரவி யாலே
திருவருள் செய்வாய் நீயே
தேப்பெரும் கமலத் தாயே!

மன்றத்து வெங்க டேசன்
மணங்கவர் மலரே போற்றி!
மாயவன் மார்பில் நின்று
மயிலெனச் சிரிப்பாய் போற்றி!

என்றைக்கும் நீங்கா தாக
இருக்கின்ற திருவே போற்றி
எளியவன் வணங்கு கின்றேன்
இன்னருள் போற்றி! போற்றி!

தாமரை மலரில் நிற்கும்
தளிரன்ன திருவே போற்றி!
தாமரை வதனங் கொண்ட
தங்கமா மணியே போற்றி

தாமரை கரத்தில் ஏந்தித்
தவமென நிற்பாய் போற்றி!
தாமரைக் கண்ணன் காக்கும்
தரணியைக் காப்பாய் போற்றி!

தாமலை போல வந்த
தவமுனி தேவர்க் கெல்லாம்
தாமரைக் கைகள் காட்டி
தயைசெயும் திருவே போற்றி!

தாமரைக் கண்ணால் செல்வம்
தந்தருள் புரிவாய் போற்றி!
தாள், மறை, நான்கு வார்த்தை,
தர்மமே போற்றி! போற்றி!

பெண்ணெனப் பிறந்தா யேனும்
பெருந்திறன் கொண்டாய் போற்றி!
பிருகுவம் சத்தில் வந்த
பீடுடை வதனம் போற்றி!

தண்ணளி வேங்க டத்தான்
தழுவிடும் கிளியே போற்றி!
தத்துநீர்க் குளத்தில் ஆடும்
தருணியே லக்ஷ்மி! போற்றி!

சித்திரக் கொடியே போற்றி!
செம்மணி நகையே போற்றி!
ஸ்ரீதரன் திருப்பா தங்கள்
சேவைசெய் குயிலே போற்றி!

பத்தினிப் பெண்டிர் தம்மைப்
பார்வையில் வைப்பாய் போற்றி!
பக்தருக் கருள்வாய் போற்றி!
பணிந்தனம் போற்றி! போற்றி!

கண்களைப் பறிக்கும் காட்சி
கவிந்தநின் வடிவம் போற்றி!
கமலப்பூ வதனம் போற்றி!
கமலமா விழிகள் போற்றி!

மண்ணிலும் விண்ணு ளோர்க்கும்
மங்கலம் நிறைப்பாய் போற்றி!
மண்டல இயக்கத் திற்கே
மந்திர மாவாய் போற்றி!

விண்ணவர் வணங்கும் தேவி
விந்தையின் மூலம் போற்றி!
விரிமலர்க் கண்ணன் தேவன்
விரும்பிடும் நகையே போற்றி!

எண்ணிய படியே உன்னை
ஏத்தினேன் போற்றி! போற்றி!
இசைபட வாழ வைப்பாய்
இலக்குமி போற்றி! போற்றி!

மைவிழிக் குவளைக் கண்ணாய்!
வலரயிலாத் திருவே போற்றி!
வானவர் மண்ணோர்க் கெல்லாம்
வணக்கமாய் நின்றாய் போற்றி!

மெய்விழி செவிவாய் நாசி
விழைந்திடும் இன்பம் போற்றி!
விரித்தமேற் புலனுக் கெல்லாம்
விளங்காத பொருளே போற்றி!

கைநிறை செல்வம் யாவும்
கடைக்கண்ணால் அருள்வாய் போற்றி!
காக்கையை அரச னாக்கும்
கைமலர் உடையாய் போற்றி!

செய்ததீ வினையை எல்லாம்
தீர்க்கின்ற நெருப்பே போற்றி!
சிறுமையைப் பெருமை யாக்கும்
திருப்பதம் போற்றி! போற்றி!

மோகனன் துணையே போற்றி!
முழுநிலா வடிவே போற்றி!
மூவுல கங்கள் தேடும்
முதற்பெரும் பொருளே போற்றி!

தேகத்தே ஒளியை வைத்த
செம்மணிக் குன்றே போற்றி!
தீராத ஆசைக் குள்ளே
திருவென நிற்பாய் போற்றி!

ஓர்கணம் தொழுதாற் கூட
ஓடிவந் தளிப்பாய் போற்றி!
ஊர்ந்தமா மேக வண்ணன்
உவப்புறச் சிரிப்பாய் போற்றி!

தாள்களில் பணிந்தே னம்மா
தண்ணருள் தருவாய் போற்றி!
தலைமுதல் பாதம் மட்டும்
தாழ்கின்றேன் போற்றி! போற்றி!

கண்பட்டால் மனது பாடும்
கார்குழல் அலையே போற்றி!
காதளவோடும் கண்ணால்
காசினி அளந்தாய் போற்றி!

வெண்பட்டால் அழகை மூடும்
வியத்தகும் சிலையே போற்றி!
வெண்மல்லி கைப்பூ மாலை
விளையாடும் தோளி போற்றி!

பண்பட்டார் இல்லா தார்தம்
பக்குவம் அறிவாய் போற்றி!
பணிபவர் இதயத் துள்ளே
பாசுரம் படிப்பாய் போற்றி!

விண்முட்டும் ஞானம் பெற்ற
வேதநா யகியே போற்றி!
வேயிரு தோளின் சக்தி
விரித்தருள் போற்றி! போற்றி!

மண்டலத் திசைகள் தோறும்
மதகரி குடங்கள் ஏந்தி
மங்கைக்கு நன்னி ராட்ட
கங்கைநீர் குடத்தில் மாந்தி,

தண்டலைக் கூந்தல் ஊற
சர்வ மங்களநீ ராட்டி
தாமரைப் பூவின் மேலோர்
தாமரைப் பூவைச் சூட்டி,

மண்டிய தூய்மைத் தாய்க்கு
மற்றுமோர் தூய்மை நல்கி,
மருவிலாப் பளிங்கின் மேனி
மாசறத் துவங்கச் செய்யும்

அண்டமா நெடியோன் தேவி,
அலைகடல் அரசன் பெண்ணே!
அரிதுயில் கொள்ளும் காலை
அடியவன் வணங்கு கின்றேன்!

பூவினில் உறையும் பூவே!
பொன்னிடை உறையும் பொன்னே!
பூஜைக்கே உரியோன் பூஜை
புரிகின்ற காதற் செல்வி!

ஏவுமோர் உலகத் துள்ளே
இன்மையான் ஒருவ னேதான்
இவனுனை இரந்து நிற்க
இதுவொரு நியாயம் போதும்!

தாவுநீர்க் கடலைப் போல
தண்ணருள் அலைகள் பொங்கும்
சந்திரப் பிறைபூங் கண்ணி
சற்றுநீ திரும்பிப் பார்த்தால்

மேவிய வறுமை தீர்ப்பேன்!
மெல்லிடைய பூங்கோ தாய், நின்
மின்னிடும் விழிகள் காண
விழைந்தனேன் போற்றி! போற்றி!

முப்புவி ஈன்ற தாயே!
மோகனச் சிரிப்பின் செல்வி!
மூவிரண் டொன்றாய் வந்த
பிரமத்தின் மொத்த மாக

அற்புதம் காட்டி நிற்கும்
அழகிய சிற்பச் சோதி
ஆனந்தத் தெய்வ மாதா
அரும்பெறல் அன்னை பேரில்

இப்பொழு துரைத்த பாடல்
எவரெங்கு பாடி னாலும்
இப்புவி உளநாள் மட்டும்
இன்பமும் அறிவும் சேரும்!

நற்பெரும் பேறும் கிட்டும்;
நன்னிலை வளரும்; என்றும்
நாட்டுக்கே ஒருவ ராக
நாளவர் உயர்வார் உண்மை!






**பெ. ராம .ராம. இராமனாதன் செட்டியார்**

மைதொட்டுக்கை பழகி மயக்குறு
　　கணக்குகள் கற்று
ஐயாவின் பெயரன் ஆனாய்
　　அருமை மாணிக்கமே!
செட்டாக இருந்து சிறக்கவே வாழ்ந்தாய்
　　போற்றி போற்றி




**பெ. ராம. ராம. மா. சம்பந்தம் செட்டியார்**

உருக்கமுடன் யாகசாலைப் பொறுப்பேற்று நடப்பித்து,
திருக்கொள்ளம் பூதூரின் சிவனடியை நினைப்பித்து,
திருக்குடநீர் ஆட்டுதல்ஓர் பத்தெனினும் முடித்திடும்நம்
திருச்சி நகர் சம்பந்தர் ருக்குமிணியார் வாழ்ந்திடுக!







**பெ. ராம. ராம. ராம. மா. காசிச் செட்டியார்**

அருச்சுனனூர் வழிபட்டு அருள்பெற்ற வில்வவனத்
திருத்தலத்தைச் சிவலோகம் ஆக்குவித்த 'பெ. ராம.'
திருக்குலத்தார் நீராட்டும் குடமுழுக்கில் செவிக்குணவு
கருக்கடையாய்ப் படைத்தளித்தகாசியென்றும் வசந்தாவுடன்
வாழ்ந்திடுக!





பெ. ராம. ராம. சோமசுந்தரம் செட்டியார்
மீனாட்சி ஆச்சி







**பெ. ராம. ராம. ராம. சோம. கணேசன் செட்டியார்**

சம்பந்தர் தேவாரச் சந்தத்தில் மனம்நெகிழ்ந்து
பைம்புனல்சேர் முள்ளாற்றில் படகோட்டும் பித்தனுக்குச்
செம்பொன்னால் குடமுழுக்குச் செய்வித்த திருப்பணியில்
நம்பரவர் கணேசனுடன் ராஜேசு வரிவாழ்க'



ராம. சுப்பையா செட்டியார்



சுப. சிந்தாமணி ஆச்சி



சுப. கணேசன்



சுப. செந்தில்

## பெ. ராம. ராம. ராம. சுப. கணேசன் செட்டியார்

கொள்ளம்பூ தூர்க்கோவில் குடமுழுக்குத் தலைவரென
உள்ளத்தை முடுக்கிவிட்ட உத்தமனார் நல்மைந்தர்
அள்ளஅள்ளக் குறையாத அவலுடன் மராமத்துக்
கள்ளமின்றிப் பார்த்துவந்த கணேசனார் வாழ்ந்திடுக!



பெ. ராம .ராம. லெ. முத்துச் செட்டியார்









**பெ. ராம. ராம. லெ. மு. கணபதி செட்டியார்**

பொதுப்பணியில் சிறந்தமுத்து; பொறுப்புடைய தருமமுத்து;
சிறப்புறவே பெற்றெடுத்த திருப்பணிக்கோர் நல்லமுத்து;
செழிப்புறவே வில்வவனக் கோவிலுக்கு மராமத்து
நடப்பித்த கணபதியார் விசாலாட்சி வாழ்ந்திடுகே!





RM. ராமநாதன் (B. E.)



RM. லெட்சுமணன்

## பெ. ராம. ராம. லெ. ராமநாதன் செட்டியார்

குடமுக்கின் பெருவணிகன்; குடமுழுக்கின் 'சூர்மைக்'
இடம்பார்த்துக் கலசத்தை எற்றியவன்; சுவைத்தேனை
மலர்பார்த்துச் சேகரிக்கும் தேனீயின் செயலுடையான்
சிவம் பார்த்த ராமநாதன் - விசாலாட்சி வாழ்ந்திடுக!



**பெ.ராம.ராம.லெ. சோமசுந்தரர் செட்டியார் (L. சோமு)**

*கோவைக்கோர் மணிவிளக்கு; கொளம்பூதூர்க் குடமுழுக்குச்
சேவைக்கோர் ஒளிவிளக்கு; சௌந்தர்ய லட்சுமியைக்
கோவிலுக்குள் அமர்வித்த கொலுவிளக்கு; வில்வவனம்
சேவிக்கும் சோமண்ணன் ஏகம்மை உடன்வாழ்க!*



**பெ. ராமா. ராம. லெ. சோம. லெட்சுமணன் செட்டியார்**

கனகதாரா தினம்நூற்கும் 'சங்கரனார்'; சோமுமைந்தன்
வடிவாக அன்புகொண்டு பற்றுகப் பணிஎழுதும்
தனமுடையான்; தந்தைசெயும் சேவைக்கோர் துணையுடையான்
சிவமுடையான் லட்சுமணர் சீதையொடும் வாழ்ந்திடுக!



**எஸ். முருகப்பன்**

ஐயாவின் பேர் சூடினாய் அருமை முருகப்ப!
உய்யும் தொழில்கள் கற்றாய்! உவப்புடனே வாழ்ந்திடுக!



**பெ. ராம. ராம. சித. ராமன் செட்டியார்**

வள்ளலெனும் 'பெ. ராம.' டிரஸ்டுக்கோர் பெருந்துணைவன்
கொள்ளம்பூ தூர்க்கோவில் குடமுழுக்குக் காண்பதற்கு,
உள்ளத்தில் ஊருணிபோல் உதவிவந்த பொருளாளன்
கள்ளமிலா(து) உழைத்தகண பதியுமையாள் வாழ்ந்திடுக!



**RM. காசி — RM. சேதுராமன்**



1935-ம் ஆண்டு எங்கள் ஐயா பெ. ராம. ராம. லெ. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் திருக்கொள்ளம் புதூரில் தங்கி திருப்பணி வேலைகளை மேற்பார்த்தபோது உடனிருந்து அனைவராலும் ‘பாப்பாள்’ என்று அழைக்கப்பெற்ற, வெள்ளைஉள்ளம் கொண்ட, என்றும் நீங்காது நினைவில் நிற்கும் எங்கள் அன்புத் தாய்

**கா. ராமாயி ஆச்சி**

அவர்களின் நினைவாக,

தெய்வானை சோக்கலிங்கம்
கா. சுப்பிரமணியம்
கா. லெட்சுமணன்
வள்ளிக்கண்ணு சுந்தரேசன்



**பெ. ராம. ராம. சித. லெட்சுமணன் செட்டியார்**

ஞானத்தை இசையாக்கி நல்கிஅருள் சம்பந்தன்
ஓடத்தை ஓட்டுவித்த வில்வவன நாதனுக்கு
மாடத்தைப் புதுப்பித்த மாபணியில் பொருளீந்த
சிலத்தான் லட்சுமணர் ருக்குமிணியார் வாழ்ந்திடுக!



**பெ. ராம. ராம. சித. நடராசன் செட்டியார்**

ஆளுடைய பிள்ளைதொழும் ஆலயத்தின் கலசத்தை
சீருடைய தாய்ப்பொருத்திக் குடமுழுக்கு நீராட்டில்
தேனுடைய தமிழெடுத்து, சிந்தனைக்கோர் மலர்தொடுத்த
பேருடைய நடராசன் பாப்பாவோ(டு) ஓங்கிடுக!







**பெ. ராம. ராம. சித. ம. ராமன் செட்டியார்**

இசைக்கலைக்கு இலக்கணமாம் யாழ்நூலை அரங்கேற்ற
இணக்கமுற்ற சிதம்பரனார் இளையதலை முறையாவர்
வணக்கமுடன் குடமுழுக்கு வேலைகளில் மராமத்தை
கணக்குடனே செய்துதந்த ராமனவர் வாழ்ந்திடுக!



**பெ. ராம. லெ. ராம. ராமநாதன் செட்டியார்**

உயர்சின்ற கோபுரத்தை உன்னிப்பாய் நேர்பார்த்து
எழுகின்ற தொய்வுக்குப் பொருள்கொடுத்து மேல்நிமிர்த்து,
திருவென்ற மகளுக்கோர் ஆலயத்தை உருவாக்கும்
தவம்வென்ற ராமனுதன் சரஸ்வதி வாழ்ந்திடுக;

**பெ. ராம. லெ. ராம. லெட்சுமணன் செட்டியார்**

கீழ்நாட்டுக் கணபதியைக் கருநாடகப் பூமியிலே
வாழ்வித்த சிறுத்தொண்டர்; பள்ளிக்கோர் புனர்ஜென்மம்
சூழ்கின்ற முதல்தொண்டர்; குடமுழுக்குப் பெரும்பணியில்
மேல்நின்ற லட்சுமணர் அடைக்கம்மை உடன்வாழ்க!





## பெ. ராம. லெ. ராம. நடராசன் செட்டியார்

பிரமனுக்கு வாழ்வுதந்த வில்வவன ஈஸ்வரற்கு
தருமமுடன் ஆலயங்கள் தானளித்த 'பெ. ராம.'
மரபுடையான்; நீராட்டும் மங்கலத்தை ஊக்குவித்த
பெருமகனார் நடராசர் சரோஜாவோ(டு) ஒங்கிடுக!







பெரி. கணபதி

## பெ. ராம. லெ. ராம. பெரியகருப்பன் செட்டியார்

அகத்தியர்க்குக் காட்சிதந்து ஆளுடைய பிள்ளையவர்
மனக்கோலால் படகோட்டக் கரைகாட்டும் வித்தகர்க்கு
நயத்தகுமோர் குடமுழுக்கில் இசைகாட்டும் நம்பெரிய
கருப்பனுடன் சிவயோக வல்லிநிதம் வாழ்ந்திடுக!







## பெ. ராம. லெ. ராம. அழகப்பச் செட்டியார்

பேரழகு நாச்சிக்கும் வில்வவன நாதருக்கும்
சீரழகு செய்வித்துத் திருக்குடநீர் ஆட்டுதற்குத்
தானளவு பாராது தனம்தந்த வேளாளன்
ராமஅழ கப்பருடன் உடைக்கம்மை வாழ்ந்திடுக!

கர்னாடகா ஜாக்ரிகான் எஸ்டேட் உள்ள காடை
வினாயகர் கோவில்



பெ. ராம. குடும்பத்திற்குச் சொந்தமான
பலையக்கோவில் மடம்



லெ. அ. வயி.
அண்ணாமலை செட்டியார்
பசுமடம் தர்மம்



பெரி. நடராஜன் செட்டியார்
ஏஜண்ட், பெ. ராம. தர்மம்



1979-ம் ஆண்டு மராமத்து வேலைகள் புதுப்பித்த
S. T. மாரியப்ப ஸ்தபதி

உ
சிவமயம்

# நகரத்தார்களும் சைவ சமயமும்

சோம லெ.

□○□

## தென்னாடும் சிவனும்

"தென்னாடு உடைய சிவனே போற்றி
எந்நாட்டார்க்கும் இறைவா போற்றி"

சிவபெருமான் தென்னவர்களால் வழிபடப்படும் கடவுள் என்பதும் விஷ்ணு வடநாட்டு மக்களால் வழிபடப்படும் கடவுள் என்பதும் பொதுவான கருத்து. இக்கொள்கைக்கு ஏற்ப, ரிக்வேதம் சிவனை, 'தட்சிணாபதி' என்று கூறுகிறது.

சிவபெருமானுக்கு உரிய சிறப்பான ஐந்து தலங்கள் - பஞ்ச பூத தலங்கள் - தென்னாட்டிலேயே உள்ளன. இந்த ஐந்து தலங்களிலும் நகரத்தார் செய்திருக்கும் திருப்பணிகளைப் பற்றி தனிநூலே எழுதலாம்.

## திருநீறும் திருமண்ணும்

சைவ சமயத்தை ஏற்றுக்கொள்ளும் சாதியர் பலர் தமிழ்நாட்டில் உள்ளனர். ஆனால் அவர்கள் சிவபெருமானை மட்டும் வழிபடுபவர் என்று, சொல்ல இயலாது. அவர்களில் பலருக்கு அழுத்தமான சைவ சமயப் பற்றுக் கிடையாது. அவர்களில் பலர் சைவர்களுடன் இருக்கும்போது சைவர் போலவும் வைணவர்களுடன் பழகும்போது வைணவர் மாதிரியும் நடந்து கொள்வர். திருநீறும் பூசுவர். திருமண்ணும் இட்டுக்கொள்வர்.

## மதமாற்றம்

சைவ சமயத்தினர் என்று தங்களைச் சொல்லிக் கொள்ளும் சாதியினரில் ஏராளமானவர் பல்வேறு சூழ்நிலைகளால் சமணம், பௌத்தம் இசுலாம், கிறித்துவம் முதலிய பிற மதங்களில் சேர்ந்துள்ளனர். பிராமணர்களிலும் பலர் இசுலாமிய, கிறித்தவ மதங்களுக்கு மாற்றப் பட்டிருக்கின்றனர் அல்லது மாறியிருக்கின்றனர். (சான்று: மால்கோம் ஆதிசேஷையாவின் முன்னோர்) நகரத்தார் இனத்தவரில்மட்டுமே ஒருவர் கூட, பிறமதங்களைத் தழுவியதில்லை. பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டும் இதனை வலியுறுத்துகிறது.

நகரத்தார்கள் மிகுதியாக வாழும் இராமநாதபுர மாவட்டத்தில் 17-ஆம் நூற்றாண்டு முதல் கிறித்தவ மதம் வெகு வேகமாகப் பரவிற்று. முக்குலத்தோர் சில நூறாயிரம் பேர் கிறித்தவ மதத்தைத் தழுவியதால், இனிமேலாவது இந்து மதத்தைக் காப்பாற்றித் தீர வேண்டுமே என்று இராமநாதபுரம் சேதுபதிகள் கிறித்தவ பாதிரிமார்கள் இராமநாதபுரம் சீமைக்குள் நுழைவதற்குத் தடைவிதித்தனர். டி பிரிட்டோ பாதிரியார்க்கு மரண தண்டனையும் விதித்தனர். செட்டி நாட்டிலும் அதன் சுற்றுப்புறத்திலும் பட்டிதொட்டியெல்லாம் பரவியிருக்கும் கிறித்தவ மதத்தினரால் தனி ஒரு செட்டியாரைக்கூட மதம் மாற்ற இயலவில்லை.

நகரத்தார்களின் அழுத்தமான சைவசமயப்பற்று, பின்வரும் இரு நிகழ்ச்சிகளால் தெரியவரும்,

## "ரயில் வேண்டாம்"

பாகனேரி என்னும் ஊர்வழியாக, காரைக்குடி-சிவகங்கை இரயில் பாதையை அமைக்க 1924-இல் அன்றைய தென்னிந்திய ரயில்வே கம்பெனி (ஆங்கிலேயர் சிலருக்குச் சொந்தமான தனிப்பட்ட நிறுவனம்) முடிவு செய்திருந்தது. அந்த நிறுவனத்தில் ஆங்கிலேயரும், ஆங்கிலோ இந்தியரும் இந்தியக் கிறித்தவர்களுமே பணியாற்றி வந்தனர். அந்தக் காலத்தில் இரயில் எஞ்சினை ஓட்டுபவர்கள் உள்பட 100க்கு 90 பேர் மேற்கண்ட மூவகையான கிறித்தவர்களே. எனவே தம் ஊருக்கு இரயில் வந்துவிட்டால், நம்மவர்களைக் கிறித்தவ மதத்தில் சேர்த்து விடுவார்கள் என்று கருதி பாகனேரி நகரத்தார்கள் 1924-ஆம் ஆண்டில் தக்கவர்களைச் சந்தித்துச் செலவு செய்து இரயில் பாதை பாகனேரிக்கு வராதபடி செய்தனர்.

## சைவ உணவு

சைவர்கள் என்றால் சைவ உணவு மட்டுமே உண்பவர் என்ற கருத்தில், முதலியார் போன்ற சில இனத்தவரில் நாங்கள் சைவ முதலியார் என்று சொல்லிக் கொள்ளுபவர்களும் உள்ளனர். நகரத்தார்கள் தொண்டை மண்டலத்திலும் சோழநாட்டிலும் இருந்த போது சைவ உணவை மட்டுமே உண்டு வந்தனர். அந்த பழக்கம் இன்றும் தேவகோட்டையில் அனைவரிடமும் பிற ஊர்களில் பலரிடமும் நிலவி வருகிறது. மறவர் நாட்டில் குடியேறிய பிறகே நகரத்தார்கள் புலால் உண்ணலாயினர். அது சுற்றுச் சூழலால் உண்டானதே.

தங்களுடைய மனைவி மக்களையும் பொருள்களையும் செட்டிநாட்டில் விட்டுச்சென்று, திரைகடலோடித் திரவியம் தேடுபவர்களாக இருப்பதால்

உணவு மட்டுமின்றி சிறு தெய்வ வழிபாட்டிலும் மறவர்களை அனுசரிக்க வேண்டிய தேவை நகரத்தார்க்கு உருவாயிற்று.

பிறவிச் சைவமாக இருந்த நகரத்தார் சிலர், இரண்டாம் உலகப் போர் காலத்தில் (1941-1945) பர்மியர் வீடுகளில் புலால் உண்டும், வேட்டி கிடைக்காத காரணத்தால் லுங்கி, கைலி, சாரம் ஆகியவற்றை உடுத்தியும் வாழ நேர்ந்த சூழ்நிலை இங்கு ஒப்பு நோக்கத்தக்கது

## சிறு தெய்வங்களை வழிபடல்

நகரத்தார்கள் பாண்டிநாட்டுக்கு வந்த பிறகே சிறு தெய்வங்களை வழிபடலானார்கள். அதற்கு முன் சிவபெருமானையும் அம்மையையும் சிவகுமாரர்களான விநாயகரையும் முருகனையுமே வழிபட்டு வந்தனர். நகரத்தார்கள் தொண்டை நாட்டிலிருந்தபோது அவர்களிடம் மரகத விநாயகர் இருந்துவந்தது என்பது வரலாறு. கடல் கடக்கக் தொடங்கிய நாள்தொட்டு, 'செட்டிகப்பலுக்குச் செந்தூரான் துணை' என்ற பழமொழி உண்டாயிற்று.

இன்றைய செட்டிநாட்டில் பகுதி, நகரத்தார் குடியேறிய நாளில் காடாக இருந்தது. இந்த உண்மை கானாடு, கோனாடு, திருக்கானப்பேர் என்ற பெயர்களாலும், 'காடு வெட்டிக்கடிய நிலந்திருத்தி வீடு கட்டிக் கொண்டிருக்கும் வேள் வணிகர்' என்ற பாடுவார் முத்தப்ப செட்டியார் பாடலாலும் தெரியவரும். எனவே, காடுகளில் மறவர்கள் வழிபட்டு வந்த சிறு தெய்வங்களை நகரத்தார்களும் வணங்கி அத்தெய்வங்களுக்கு கோயில் (கட்டிடம்)கட்டினர், அவற்றைத் தங்கள் குல தெய்வங்களாகவும் ஏற்றனர். எந்த ஊரில் குடியிருந்தனரோ அவ்வூருக்கு அருகே அமைந்த காட்டுத் தெய்வம் அந்த நகரத்தார் குடும்பத்தின் குல தெய்வம் ஆயிற்று. பிறகு அவ்வூரை விட்டு வேறு ஊருக்குக் குடிபெயர்ந்த பின்னரும் முன்னைப் பழக்கத்தால் அந்தக் கோயிலுக்கு ஆண்டுக்கொருமுறை (சிவராத்திரி நாளில்) சென்று வழிபட்டு குழந்தைகளுக்கு தொட்டி கட்டுவது முதலிய வழக்கம் ஏற்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். (சான்று சில தலைமுறைகளுக்கு முன் ராங்கியத்திலிருந்து குடியேறி அல்லது சுவீகாரமாக ராயவரம், நேமத்தான்பட்டி ஆகிய ஊர்களுக்குச் சென்றவர்களின் வழித்தோன்றல்கள் இன்னும் ராங்கியம் கருப்பருக்கு அடிமையாக உள்ளனர். கருங்குளத்திலிருந்து ஆ. தெக்கூருக்கு குடியேறிய கருமுத்து குடும்பத்தார் கருங்குளத்தார் வீடு என்று ஊர்ப்பெயர் பெற்று அந்த ஊர் அருகேயுள்ள கத்தப்பட்டுக் கருப்பர் கோயிலுக்கு இன்றும் சென்று வருகின்றனர். மதுரை மாவட்டத்தில் மேலூர் அருகேயுள்ள கீழையூர் நாவினிப்பட்டி முதலிய சில ஊர்களில் இப்போது குடியிருந்து

நகரத்தாரினின்றும் தனித்து வாழும் செட்டியார்கள் 300 ஆண்டுகளுக்கு முன் தாங்கள் வாழ்ந்த காரைக்குடிகாத்தான் (என்னும் ஊரிலுள்ள) கரைமேல் அழகியர் கோயிலுக்கு ஆண்டுக்கு ஒரு முறை செல்லுகின்றனர்.

## அம்மை அப்பன் பெயர்கள்

நகரத்தார்கள் சைவ சமயத்து முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானிடம் கொண்டுள்ள ஈடுபாடு அந்நிய மதத்தில் சேரக்கூடாது என்ற கல்வெட்டாலும் அம்மை-அப்பன் பெயர்களைத் தம் மக்களுக்கு இருப்பதாலும் உணரலாம். இப்பெயர்களாவன.

| | | |
|---|---|---|
| அழகம்மை | — | அழகப்பன் |
| அடைக்கம்மை | — | அடைக்கப்பன் |
| ஆதம்மை | — | ஆதப்பன் |
| உலகம்மை | — | உலகப்பன் |
| ஏகம்மை | — | ஏகப்பன் |
| கண்ணம்மை<br>கண்ணாத்தாள் | — | கண்ணப்பன் |
| சாத்தம்மை | — | சாத்தப்பன் |
| செல்லம்மை | — | செல்லப்பன் |
| சேக்கம்மை | — | சேக்கப்பன் |
| சோலையம்மை<br>(சோலைச்சி) | — | சோலையப்பன் |
| தேனம்மை | — | தேனப்பன் |
| ராக்கம்மை | — | ராக்கப்பன் |
| வள்ளியம்மை | — | வள்ளியப்பன் |
| நல்லம்மை | — | நல்லப்பன் |
| நாச்சம்மை | — | நாச்சியப்பன் |
| முத்தாத்தாள் | — | முத்தப்பன் |

அப்பன் என்ற இறுதிச் சொல்லுடன் முடிவடையும் பின்வரும் பெயர்களும் நகரத்தார் ஆடவர்க்கு இடம்பெறுகின்றன.

| | |
|---|---|
| ஆண்டியப்பன் | பெரிச்சியப்பன் |
| ஆவுடையப்பன் | வீரப்பன் |
| காடப்பன் | முருகப்பன் |
| காளையப்பன் | செட்டியப்பன் |
| கிருஷ்ணப்பன் | திண்ணப்பன் |
| பழனியப்பன் | |

உ

சிவமயம்

# கோவிலும் கோவில் திருப்பணியும்

ST. மாரியப்ப ஸ்தபதியார்
கார்த்திகேய ஸ்தபதியார்

சோழவள நாட்டில் இறைவன் உறையும் கோவில்கள் பல. இவை களில் திருஞான சம்பந்தப் பெருமான் பதிகம்பாடி ஓடம் செலுத்திய திருத்தலம் திருக்கொள்ளம்புதூர். இத்தலத்தின் இறைவன் ஸ்ரீவில்வா ரண்யேஸ்வரர், இறைவி ஸ்ரீசௌந்தரநாயகி. இத்தலம் மிகவும் புராணப் பெருமையுடையது. மூர்த்தி தலம், தீர்த்தம் மூன்றிலும் சிறப்புடையது. இத்தலத்தில் யாரேனும் இறந்தால் வில்வாரண்யேஸ்வரர் தேவியோடும் வந்து வலச்செவியில் திருவைந்தெழுத்தை உபதேசித்து முக்தி தரும் பெருமையுடையது.

இத்திருக்கோவில் சோழ மன்னர்கள் காலத்தில் கட்டப்பெற்றது. கோவில் காலத்தால் சிதைவுற்ற போது, நச்சாந்துபட்டி பெ.ராம. இராமன் செட்டியார், பெ. ராம. இலட்சுமணன் செட்டியார் குடும்பத்தினர்கள் ஏராளமான பொருள் செலவுடன் கருங்கல்லினால் திருப்பணி அழகுறச் செய்து 27—6—37 ல் திருக்கோவில் மகா கும்பாபிஷேகம் சிறப்பாக நடத்தியுள்ளனர்.

## இத்திருப்பணியில் அடங்கிய கோபுர விமானங்களும் அதன் முக்கிய சிற்பங்களும்:

(1) முன் நுழைவாசல் சாலாகார கோபுரம் (2) ஸ்ரீ பொய்யாத விநாயகர் ஏகதள விமானம் (3) ஸ்ரீ தண்டாயுதபாணி ஏகதள விமானம் (4) சுவாமி 5 நிலை ராஜ கோபுரம் (5) அம்பாள் 3 நிலை ராஜ கோபுரம் (6) சுவாமி மூலஸ்தான 3 நிலை விமானம் (7) ஸ்ரீ வலம்புரி விநாயகர் ஏக தள விமானம் (8) ஸ்ரீசோமாஸ்கந்தர் 2 நிலை விமானம் (9) ஸ்ரீசுப்பிர மணியர் 2 நிலை விமானம் (10) ஸ்ரீ கெஜலட்சுமி ஏகதள விமானம் (11) நடராஜர் சபை (12) அம்பாள் 2 நிலை விமானம் (13) ஸ்ரீ பைரவர் ஏகதள விமானம் (14) பள்ளியறை விமானம் (15) உள் திரு

மதில் பூத ரிஷபங்கள், தென்புறம் ஸ்ரீ தட்சிணாமூர்த்தி உபதேச கோலம் ரிஷிகளுடன், மேற்கு ஸ்ரீ பெருமாள், தேவி, ஆஞ்சநேயர் கருடாள்வாருடன் ஆதிசேஷன் மீது சயனத் திருக்கோலம், வடக்கே பிர்மா காயத்திரி, சாவித்திரியுடன் அமர்ந்த கோலம் (16) தெற்கு வாசல் அம்மன் சாலாகாரம் மீனாட்சி திருக்கல்யாண கோலத்துடன் (17) மேல வாசல் ஞான சம்பந்தப் பெருமான் ஓடம் செலுத்திய காட்சியும் காட்சி கொடுத்தலும் (18) வெளிதிருமதில் பூத ரிஷபங்கள்.

# முக்கிய சிற்பங்கள்

## முன் 5 நிலை ராஜகோபுரம்

உயரம் 63 அடி சுதைகள் 353. இதில் சம்மந்தப் பெருமான் பதிகம்பாடி ஓடம் செலுத்திய காட்சியும், இறைவன் நீச ரூபத்தில் இறைவியுடன் சோமயாஜிமாற நாயனார் யாகத்திற்கு எழுந்தருளும் காட்சியும், கண்ணப்ப நாயனார் இறைவனைப் பூஜிக்கும் காட்சியும், மார்க்கண்டனுக்காக இறைவன் யமதர்மனை சம்ஹாரம் செய்த காட்சியும், மீனாட்சி திருக்கல்யாணக் கோலமும், தட்சிணாமூர்ததி அய்தீகமும், வடபுரம்-பிர்மா தேவிமார்களுடன் அமர்ந்த கோலமும், சிவபெருமானின் திருவிளையாடற் காட்சிகளும், மேல்புரம்-பெருமாள் அய்தீகங்களும் கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் அமைந்திருக்கிறது.

## அம்பாள் ராஜகோபுரம் 3 நிலை

உயரம் 50 அடி இதில் உள்ள சுதைகள் 143. கோபுரத்தில் சப்த மாதாக்களும், அஷ்ட சக்திகளும் அம்பாளின் திரு உருவங்களும், ராஜ ராஜேஸ்வரியின் அரசுக் கோலமும் கண்கவர் வண்ணம் அமைந்திருக்கின்றது.

## சுவாமி மூலஸ்தானம் 3 நிலை

உயரம் 31 அடி சுதைகள் 92 இதில் மேல்தலத்தில் அஷ்டதிக்கு பாலகர்களும், கீழ்வந்த நிலைகளில் சிவபெருமான் திருவிளையாடற் காட்சியும், பெருமாள் அவதாரக் கோலமும் சுப்பிரமணியர், விநாயகர், துவாரபாலகர்கள், கோபுரம் தாங்கிகள் இவற்றின் நூதன அமைப்பும் கண்டோர் வியக்கும் வண்ணம் அமைந்திருக்கிறது.

## அம்பாள் மூலஸ்தான விமானம்

உயரம் 21 அடி சுதை விக்கிரகங்கள் 86. மேற்படி விமானத்தில் அம்பாள் திருவிளையாடல்களும், கோபுரம் தாங்கிகளும், சப்தமாதர் அஷ்ட சக்திகளும் அழகுற அமைந்திருக்கிறது.

## ஸ்ரீமகாலட்சுமி கோவில் ஏகதள விமானம்

இது புதியதாகக் கீழ் இருந்து கர்ப்ப கிருகம், விமானம் 1 மாதத்தில் கட்டி முடித்து 1—4—79ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது.

இதன் உயரம் 21½ அடி சுதைகள் 11, இது கோவில் தேவஸ்தான அலுவலகத்திற்கும், ராஜகோபுரத்திற்கும், இடையில் அமைந்திருக்கிறது.

விமானத்தைச் சுற்றிலும் அஷ்ட லட்சுமிகள் அழகுற அமைந்திருக்கின்றன. இந்த விமானம் பெ.ராம. குடும்ப மகளிர்களின் நன்கொடையால் செய்து முடிக்கப்பெற்றது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

மேற்படி வேலைகள்யாவும் மீண்டும் 42 ஆண்டுகளுக்குப் பிறகு பெ.ராம. குடும்பத்தினர்களால் திருப்பணிவேலைகள் 4-11-78ல் ஆரம்பிக்கப் பெற்று கோபுர விமானங்களைப் பழுதடைந்த வர்க்கங்கள் யாவும் புதுப்பித்தும் உடைந்த சுதைகளை ரிப்பேர் செய்தும், 70 சுதைகள் புதிதாகச் செய்தும் இரண்டு கலரில் வர்ணக் கலாபம்செய்து 1 வருடத்தில் முடிக்கத் திட்டமிட்ட வேலையை 7 மாத காலத்தில் முடித்து 1—7—79 ல் கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது,

மேற்கண்ட வேலைகள் யாவும் குறிப்பிட்ட காலத்திற்கு முன்னதாக செய்து முடிக்கப் பெரிதும் ஆதரவும் ஒத்துழைப்பும், நிதியும் கொடுத்து ஊக்கமளித்த பெ. ராம. குடும்பத்தினர்களில் முக்கியமாக புதுக்கோட்டை உயர்திரு. சித. இராமன் செட்டியார் அவர்களுக்கும். மதுரை உயர்திரு. P. RM. RM. ஸ்ரீமனுதன் செட்டியார் அவர்களுக்கும், கோயம்புத்தூர் உயர்திரு. லெ. சோமு செட்டியார் அவர்களுக்கும் எங்களது உளங் கனிந்த நன்றியும் வணக்கமும்.





R. சாமிநாத அய்யர்



நடராஜ குருக்கள்



கோபி அய்யங்கார்



ராகவ அய்யங்கார்



**R. தண்டபாணி**

துணை ஆணையர்

தமிழக அறநிலையத்துறை

நாகை.



**S. K. மீனாட்சி சுந்தரம்**

கோவில் நிர்வாக அதிகாரி

உ
சிவமயம்

# திருக்கொள்ளம்பூதூர்
# ஸ்ரீ செளந்தர நாயகியம்பா சமேத ஸ்ரீ வில்வவன நாத சுவாமி

---

# அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகப் பத்திரிகை.

---

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம்.

உ
திருச்சிற்றம்பலம்

கொட்டமேகமழுங் கொள்ளம்பூதூர்
நட்டமாடிய நம்பனையுள்க
செல்ல வுந்துக சிந்தையார்தொழ
நல்கு மாறரு ணம்பனே

கொன்றை சேர்சடை யான்கொள்ளம்பூதூர்
நன்று காழியுண் ஞானசம் பந்தன்
இன்றுசொன் மாலை கொண்டேத்தவல் லார்போய்
என்றும் வானவ ரோடிருப் பாரே.

வலம்புரி விநாயகர்

திருவளரு மணிமார்ப னயன்முதலோர்க் கறிவரிய தெய்வ மாகி
யுருவளரு மருமறையி னுட்பொருளாம் பிரணவத்தி னொளியாய் நின்று
கருவளரு மாந்தர்தமக் குறுமிடையூ றகற்றியென்றுங் காக்க வல்ல
மருவளர் கொள்ளம்பூதூர் வலம்புரிவிநாயகன்றாள்வணக்கம் செய்வோம்

## வடிவுடையம்மை.

துடியமருந் திருக்கரத்த ரிடப்பாகமமர்ந்தினித் தோகை யண்டம்
படிமுதலா மெய்ப்பொருளு மீன்றளித்த முதல்வியளி பயிலும் வண்பூங்
கொடிகளிடை மிடையுமருங் கடிகமழ்பூம் பொழில்வளமார்
கொள்ளம்பூதூர்
வடிவுடையம் பிகைகமல மலர்த்தாளே யெஞ்ஞான்று மனத்துட்
கொள்வாம்

---

## வில்வவனநாதர்.

பாவலனு கியஞான சம்பந்தன் முள்ளிவெள்ளம் பரவக்கண்டு
நாவலமே கோலாக நடத்தியவோ டங்கரைக்கு நண்ணச்செய்து
கூவியடி யார்தொழ்நற் காட்சியளித் தருளியநற் கொள்ளம்பூதூர்
மேவுமொரு வில்வவன நாதரடிப் போதுமுடி மீது சேர்ப்பாம்.

—o—

## முருகக் கடவுள்.

உருகுமடி யார்க்கிரங்கி யவர்மயல்வெம் பவந்தவிர்க்கு
மொருவன் றிம்பால்
பருகுமிளங் குதலைமொழிப் பாலனெனச் சரவணத்துற்
பவித்து முன்னங்
குருகுபெயர்க் குன்றெறிந்த கொற்றவடி வேற்குமரன்
கொள்ளம்பூதூர்
முருகுகமழ் கடம்புபுனை முருகனிரு பதமலரெம்
முடிமேல் வைப்பாம்.

## சண்டேசுரர்.

புண்ணியம்பாதக மாகப் போற்றிய
அண்ணலந் தக்கனு ரகத்து நாணிய
புண்ணியம் பாதக மாகப் போற்றிய
அண்ணலந் தண்டிதானடிகள் போற்றுவோம்.

எங்கும் நிறைந்த இறைபரம்பொருளும், உண்மையறிவானந்த வுருவினரும், தம்மை மனமொழி மெய்களால் உண்மையன்போடு வழிபாடு செய்யும் அன்பர்க்கு இன்பம் பெருக்கி யிருளகற்றி யெஞ்ஞான்றுந் துன்பந்தொடர் வறுத்துச் சோதியாய் நின்று பருகற்கினிய பரங்கருணைத் தடங்கடலாய்த் திகழ்கின்றவரும், யாவர்க்குமேலாம் அளவிலாச் சீருடையாரும் ஆகிய சிவபெருமான், மக்களுக்குப் போகியாயிருந்து போகத்தையருளவும், யோகியாயிருந்து யோகமுத்தியுதவும், தம் அருள் வடிவினளாகிய அம்மையோடும் கந்த கணேசாதி பரிவாரங்களோடும் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக் கும் திருத்தலங்கள் இந்நிலவுலகிற் பலவுள்ளன. அவற்றுள், பூவிரிபொழில் சூழ் காவிரியாற்றின் வளஞ்செறிந்த சோழவள நாட்டிலே தேவாரம் பெற்ற தலங்களுள் பூவின்மங்கை இதயகமலமாம் திருவாரூர் கீழ்பாலும், திருப்பூவனூர் தென்பாலும், ஆலங்குடியென்று வழங்கும் திருவிரும்பூளை மேல்பாலும், திருக்குடவாயில் வடபாலும் சூழ்தர இவற்றின் நடுவண் வெட்டாறு என்றுவழங்கும் முள்ளிநதி யின்கீழ்கரையில் அமைந்து திகழ்வது திருக்கொள்ளம்பூதூர் என்னும் தெய்விகத்திருத்தலமாகும்.

இத்திருத்தலம் நான்கு யுகத்தினும் முறையே பிரமவனம் பஞ்சாக்கபுரம், காண்டீபவனம், வில்வவனம் என்னும் திருநாமங்களை யுடையதாய் விநாயகர், பிரமன், அகத்தியர், ஆதிசேடன், கங்கை காவிரி, இடைக்காடன், விஜயன், வரகுண பாண்டியன், சிலந்திச் சோழன் முதலிய தேவர் மக்கள் பலரும் வழிபட்டுப் பேறுபெற்ற பெருமையுடையது என்பது புராணப் பிரசித்தம். இன்னும் இத்தலம் திருஞானசம்பந்த சுவாமிகள் பாண்டி நாட்டிற் சைவம் நிலைபெறச்செய்து, சோணாட்டுத் தலதரிசனஞ் செய்து வருங்கால், வெட்டாறுஎன்று வழங்கும்முள்ளி நதியில் வெள்ளப்பெருக்குமிக அதனால் ஓடக்கோல் நிலையிலாமை கண்டு, ஓடஞ்செலுத்துவோர் அவ்வோடங்களைக் கரையின்கண் நிறுத்திப்போக ஆங்குப்போந்த அப்பிள்ளைப் பெருந்தகையார், இத்திருக்கொள்ளம்பூதூர் எதிர் தோன்றக்கண், இதனைத் தரிசிக்கும் பேரன்பு பெருகியதால், அவ்வோடங்களைக் கட்டவிழ்த்து அவற்றில் அடியார் குழாங்களை யேற்றுவித்து தம் நாவலமேகோலாக கொட்டமே கமழுங் "கொள்ளம்பூதூர்" என்னுந் திருப்பதிகம் பாடியருள, அவ்வோடங்கள் தாமே அக்கரைசேர்ந்தனவாகப் பிள்ளையார் அடியார் குழாங்களுடன்

இத்திருத்தலத்து இறைவனை வணங்கி "தாணுவே! ஆற்றின்கண் ஓடமுய்க்குந் தன்மையால் அருள் தந்த தலைவா! நாகப் பூணிணுய்! களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே!" என்று துதித்துப் பணிந்து வழிபடப்பெற்ற பெருமை வாய்ந்தது.

இத்தெய்விக திருத்தலத்துத் திருக்கோயில் பழமையால் மிகவுஞ் சிதைவுற்றிருந்தமைகண்டு முற்றும் பிரித்தெடுத்து சிவாகமசிற்ப முறைப்படி கர்ப்பக்கிருகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், பிராகார கோபுரம் முதலியனவெல்லாம் கருங்கற்களாலும், வண்ணச்சுதைகளாலும் எங்கள் குடும்பத்தலைவராகிய பெ. ராம. இராமன் செட்டியாரவர்களால் அழகுறச் செய்யப்பெற்றுத் திருவருட்பாங்கால் திருப்பணி நிறைவேறியது.

இத்தெய்வ மணங்கமழுந் திருக்கோயிலின்கண் ஸ்ரீ சௌந்தர நாயகியம்பா சமேத ஸ்ரீ வில்வவனநாத சுவாமிக்கும், வலம்புரிவிநாயகர், முருகப்பெருமான், தென்முகக் கடவுள், சண்டேசுரர் முதலிய பரிவார தேவர்களுக்கும், நிகழும் ஈசுவர ௵ ஆனி ௴ 14௳ (27-6-37) ஞாயிற்றுக்கிழமை சதுர்த்தி திதியும் திருவோணமும் அமிர்தயோகமுங்கூடிய நன்னாளில் உதயாதி நாழிகை 15-23(பகல் மணி 12-10)அளவில் நல்வேளையுடன்கூடிய கன்யாலக்கின சுபமுகூர்த்தத்தில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் செய்யத் திருவருட்டுணைகொண்டு நிச்சயித்திருப்பதால் அதற்குச் சிவநேசச்செல்வர்களாகிய தாங்கள் சுற்றமுந் துணையுஞ் சூழ்தரவந்திருந்து இப்பெருஞ்சாதி வைபவத்தையும், அன்றிரவு சுவாமியும் அம்மையாரும், கந்த கணேசர் முதலியபரிவாரங் களுடன் எழுந்தருளும் திருவுலாச்சிறப்பையும் தரிசித்துப்-பேரானந்தப் பெருவாழ்வெய்த வேண்டுகின்றோம்.



## இவ்வரிய வேள்வியின் செயல்முறை விளக்கம்

| தமிழ் ஈசுவர-ஞூ ஆனி-மீ | இங்கிலீஷ் 1937 ஞூ ஜூன் மீ | கிழமை | செயல்முறை விபரம் |
|---|---|---|---|
| 8உ | 21உ | திங்கட்கிழமை | உதயாதி நாழிகை 35 (இரவு மணி 8) அளவில் தனுர் லக்கினத்தில் அனுஞ்ஞை, கணபதி வழிபாடு முதலியன. |
| 11உ | 24உ | வியாழக்கிழமை | உதயாதி நாழிகை 18¾ (பகல் மணி 1-30) அளவில் கன்யா லக்கினத்தில் கடஸ்தாபனம் யாகபூஜாரம்பம். |
| ,, | ,, | ,, | மாலை முதல் 14உ (27-6-37) ஞாயிற்றுக்கிழமை காலை வரை யாகபூஜை. |
| 14உ | 27உ | ஞாயிற்றுக்கிழமை | உதயாதி நாழிகை 15 விநாடி 23 (பகல் மணி 12-10) அளவில் மகா கும்பாபிஷேகம். |
| ,, | ,, | ,, | அன்றிரவு சுவாமியும் அம்பிகையும், பரிவாரங்களுடன் திருவீதிகளில் திருவுலாப் போந்து காட்சியருளுதல். |

திருக்கொள்ளம்பூதூர்,
ஈசுவர ஞூ,
வைகாசி மீ,
22 உ. (4—6—37)

இங்ஙனம் அன்புள்ள திருப்பணியாளர்கள்,
பெ. ராம. இலக்குமணன் செட்டியார்.
பெ. ராம. ராம. இராமநாதன் செட்டியார்.
பெ. ராம. ராம. இலக்குமணன் செட்டியார்,
பெ. ராம. ராம. சிதம்பரஞ் செட்டியார்,
நற்சாந்துபட்டி.

குறிப்பு:—

1) இத்தலம் கொரடாசேரி யென்னும் ரயில்வே ஸ்டேஷனுக்கு வடபால் 3 மைலில் உள்ளது; இக்காலத்து திருக்களம்பூர் என்று மருவி வழங்கப்பெறுகிறது; கும்பகோணமிருந்து குடவாசல் வழியாக 15 மைலில் உள்ளது; சர்வீஸ் கார் முதலியவற்றிலும் வரலாம்.

2) கும்பாபிஷேக நாளன்றும் அதற்கு முதல் நாளிலும் சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாஜ விசேடக் கூட்டம் நடைபெறும். ஆனி-மீ 11உ முதல் 14உ வரை தேவாரம், இசை, நாட்டியம், நாதஸ்வரம் முதலிய கலைப்பகுதிக் கூட்டங்கள் நடைபெறும். இவற்றின் நிகழ்ச்சி முறைகளைத் தனித்தனி பத்திரிகைகளிற் காணலாம்.



பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

திருச்சிற்றம்பலம்.



உ
சிவமயம்
ஸ்ரீ பொய்யாத விநாயக மூர்த்தி துணை

## திருக்கொள்ளம்பூதூர்

## ஸ்ரீ சௌந்தரநாயகி அம்பாள் சமேத ஸ்ரீ வில்வவனநாதஸ்வாமி

# அஷ்டபந்தன மகா கும்பாபிஷேக அழைப்பிதழ்

கொட்டமே கமழும் கொள்ளம்பூதூர்
நட்ட மாடிய நம்பனை யுள்க
செல்ல வுந்துக சிந்தையார் தொழ
நல்கு மாறருள் நம்பனே.

### வலம்புரி விநாயகர்

வலம்புரி யியற்றமிழ் நாவின் மல்கவும்
பொலம்புரி யிறைத்தரும் பொருளை யெய்தவும்
சிலம்புரி யடியரை யாளுந் தேவருண்
வலம்புரிப் பிள்ளையை வணங்கி வாழ்த்துவாம்.

### வில்வவனநாதர்

பாவலனு கியஞான சம்பந்தன் முள்ளி வெள்ளம்
பரவக் கண்டு
நாவலமே கோலாக நடத்தியவோ டங்கரைக்கு
நண்ணச் செய்து
கூவியடி யார்தொழநற் காட்சியளித் தருளியநற்
கொள்ளம் பூதூர்
மேவுமொரு வில்வவன நாதரடிப் போதுமுடி மீது
சேர்ப்பாம்.

## சௌந்தர நாயகி

இருளணைய கருங்குழலும் இளநிலவார் வெண்ணகையும்
எழிற்செவ்வாயும்
கருணைபொழி திருமுகமும் கணைவிழியும்
பணைத்தோளும் கமலக்கையும்
பொருவரிய தளதடமும் யவனமெலாம்
பரவிரு தாட்புண்டரீக
அருண மலரும் அழகிய நம் சௌந்நர நாயகியை
நினைந்தகத்துள் வைப்பாம்,



பூவிரிபொழில் சூழ் காவிரியாற்றின் வளஞ்செறிந்த சோழவள நாட்டிலே, திருக்கொள்ளம்பூதூர் என்னும் தேவாரம் பெற்ற தெய்வீகத் திருத்தலம் வெட்டாறு என வழங்கும் முள்ளிநதியின் கீழ்கரையில் அமைந்து திகழ்கிறது.

இத்திருத்தலம் நான்கு யுகத்திலும் முறையே பிரமவனம், பஞ்சாக்கரபுரம், காண்டீபவனம், வில்வவனம் என்னும் திருநாமங்களை உடையதாய் விநாயகர், பிரமன், அகத்தியர், ஆதிசேடன், கங்கை காவிரி. இடைக்காடன், விஜயன், வரகுணபாண்டியன், சிலந்திச்சோழன் முதலிய தேவர் மக்கள் பலரும் வழிபட்டுப் பேறுபெற்ற பெருமையுடையது என்பது புராணப்பிரசித்தம். இன்னும் இத்தலம் திருஞானசம்மந்த சுவாமிகள் பாண்டி நாட்டில் சைவம் நிலைபெறச்செய்து சோணாட்டுந் தலதரிசனஞ் செய்து வருங்கால். வெட்டாற்றில் வெள்ளப் பெருக்குமிக. அதனால் ஓடங், கோல் நிலையிலாமை கண்டு ஓடஞ் செலுத்துவோர் அவ்வோடங்களைக் கரையில் நிறுத்திப்போக, ஆங்கு போந்தஅப்பிள்ளைப் பெருந்தகையார் இத்திருக்கொள்ளம்பூதூர் எதிர் தோன்றக் கண்டு இதனைத் தரிசிக்கும் பேரன்பு பெருகியதால், அவ்வோடங்களைக் கட்டவிழ்த்து அவற்றில் அடியார்குழாங்களை யேற்றுவித்து தம்

நாவலமே கோலாக "கொட்டமே கமழுங் கொள்ளம்பூதூர்" என்னும் திருப்பதிகம் பாடியருள, அவ்வோடங்கள் தாமேஅக்கரை சேர்ந்தனவாகப் பிள்ளையார் அடியார் இத்திருத்தலத்து இறைவனை வணங்கி வழிபடப் பெற்ற பெருமைவாய்ந்தது.

இத்தெய்வீகத் திருத்தலத்து திருக்கோவில் பழமையால் மிகவுஞ்சிதைவுற்றிருந்தமை கண்டு முற்றும் பிரித்தெடுத்துச் சிவகாம சிற்பமுறைப்படி கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், பிரகாரக்கோபுரம் முதலியனவெல்லாம் கருங்கற்களாலும், வண்ணச் சுதைகளாலும் நற்சாந்துபட்டி **பெ. ராம. ராமன் செட்டியார், பெ. ராம. இலக்குமணன் செட்டியார்** குடும்பத்தினர்களால் அழகுறத் திருப்பணி செய்யப்பெற்று ஈஸ்வர ஞு ஆனி மீ 14உ (27—6—1937) திருக்குட நன்னீராட்டும் சிறப்பாக நடைபெற்றது.

மீண்டும் நற்சாந்துபட்டி பெ. ராம. குடும்பத்தினர் இத்திருக்கோயிலைப் புதுப்பித்து **ஸ்ரீ சௌந்தரநாயகியம்பாள் சமேத ஸ்ரீ வில்வவனநாதஸ்வாமிக்கும்**, வலம்புரி விநாயகர், முருகப்பெருமான், தென்முகக்கடவுள், சண்டேசுவரர். மகாலெட்சுமி முதலிய பரிவார தேவர்களுக்கும் நிகழும் சித்தார்த்தி ஞு ஆனி மீ 17உ (1—7—1979) ஞாயிற்றுக்கிழமை காலை மணி 6-15 க்கு மேல் 7-15 மணி அளவில் மிதுன லக்னத்தில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் செய்ய திருவருட்துணை கொண்டு நிச்சயித்திருப்பதால் அதற்கு தாங்கள் சுற்றமும் துணையும் சூழ்தர வந்திருந்து இப்பெருஞ்சாந்தி வைபவத்தையும் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளும் திருவுலாச் சிறப்பையும் தரிசித்து பேரானந்தப் பெருவாழ்வெய்த வேண்டுகிறோம்.



## நிகழ்ச்சி நிரல்

| ஆங்கில தேதி | தமிழ் தேதி | கிழமை | நேரம் | நிகழ்ச்சி |
|---|---|---|---|---|
| | சித்தார்த்தி | | | |
| 27-6-79 | ஆனி-13 | புதன் | காலை மணி 6 to 7 | அனுக்ஞை விக்னேசுவர பூசை, தன பூஜை |
| 28-6-79 | ஆனி-14 | வியாழன் | மாலை மணி 4 | வாஸ்து சாந்தி, மிருத்சங்கிரகணம் அங்குரார்ப்பணம், இரட்சா பந்தனம் |
| ... | ... | ... | இரவு 8-15 | கலாகர்ஷணம், கடஸ்தாபனம் |
| ... | ... | ... | | யாகபூஜை தொடக்கம் |
| 29-6-79 | ஆனி-15 | வெள்ளி | காலை | யாகபூஜை காலம் 1 பூரண ஆகுதி |
| ... | ... | ... | மாலை | யாகபூஜை காலம் 2 பூரண ஆகுதி |
| 30-6-79 | ஆனி-16 | சனி | காலை | யாகபூஜை காலம் 3 பூரண ஆகுதி |
| ... | ... | ... | மாலை | யாகபூஜை காலம் 4 பூரண ஆகுதி |
| | | | | யாகபூஜை காலம் 5 பூரண ஆகுதி |
| 1-7-79 | ஆனி-17 | ஞாயிறு | காலை 4-30 மணி | யாகபூஜை காலம் 6 பூரண ஆகுதி |
| ... | ... | ... | காலைமணி6-15-7-15 | திருக்குட நன்னீராட்டு |
| ... | ... | ... | மாலை மணி 3 | மகா அபிஷேகம் |

விழாக்காலத்தில் நான்மறை ஓதப்பெறும், பன்னிரு திருமுறைப் பதிகம் பாடப்பெறும். இசை நிகழ்ச்சிகள், நாதஸ்வர இன்னிசை நடைபெறும்.

எஸ். கே. மீனாட்சிசுந்தரம்,
செயல் அலுவலர், திருகொள்ளம்பூதூர்.
6—6—79.

இங்ஙனம்,
பெ. ராம. குடும்பத்தினர்கள்,
நற்சாந்துப்பட்டி.

உ

சிவமயம்

திருக்கொள்ளம்புதூர்

(தஞ்சை மாவட்டம்)

# அருள்தரு சௌந்தரநாயகி அம்பாள் சமேத

# ஸ்ரீ வில்வாரண்யேஸ்வரர்

## திருக்குட நன்னீராட்டு விழா.

 

சித்தார்த்தி-ஹூ ஆனி-மீ 13உ 27-6-79 முதல் 1-7-79 வரை

## நிகழ்ச்சி நிரல்

 

இங்ஙனம்,

பெ. ராம. குடும்பத்தினர், நற்சாந்துபட்டி.

# நிகழ்ச்சி நிரல்

—o—

ஆனி-மீ 13உ. (27—6—79) புதன்கிழமை

காலை அனுக்ஞை விக்னேசுவர பூஜை

திருக்கொள்ளம்புதூர்

**P. M. பக்கிரிசாமி & பார்ட்டி**

நாதஸ்வரம்

ஆனி-மீ 14உ. (28—6—79) வியாழக்கிழமை

மாலை வாஸ்து சாந்தி

நாதஸ்வர இசைமணி

**கும்பகோணம் V. சுந்திரபாதம் & பார்ட்டி**

நாதஸ்வரம்

இரவு 7-00 மணிக்கு

**திருச்சி G. சௌந்தரராஜன் & பார்ட்டி**

திரை இசை நடைபெறும்

யாக பூஜை காலம் 1

ஆனி-மீ 15உ. (29—6—79) வெள்ளிக்கிழமை

காலை யாகபூஜை காலம் 2

நாதஸ்வர லயஞான இன்குழல் இளவரசு

**கண்ணப்பூர் K. நடராஜன் & பார்ட்டி**

நாதஸ்வரம்

மாலை யாகபூஜை காலம் 3

மாலை யாகபூஜைகாலம்

இரவு 7-00 மணிக்கு

**திருச்சி சீனிவாசன் & பார்ட்டி**

தனிவயலின்

ஆனி-மீ 16உ (30—6—79) சனிக்கிழமை

காலை யாகபூஜை காலம் 4
நாதஸ்வர கலா ரெத்தினம்
குடவாசல் K. S. ராமமூர்த்தி & பார்ட்டி
நாதஸ்வரம்
மாலை யாகபூஜை காலம் 5

இரவு 7-00 மணிக்கு
நாட்டியகலாமணி
புதுக்கோட்டை மாஸ்டர் ரமணியின் சிஷ்யைகளான
பேபி நாகு அலமு, பேபி மீரா, சசிகலா சுஜாதா
ஆகியோர் பங்குபெறும் பரத நாட்டியம்

ஆனி மீ 17உ (1—7—79) ஞாயிற்றுக்கிழமை

காலை 4-30 மணிக்கு
யாகசாலை பூஜை காலம் 6
பெ. ராம. குடும்பத்தினரால் புதுப்பிக்கப்பெற்ற அருள்தரு சௌந்தரநாயகி அம்பாள் சமேத வில்வாரண்யேஸ்வரர் பரிவார தேவதைகளுக்கு காலை மணி 6-15 to 7-15
திருக்குட நன்னீராட்டு.

காலை 8-30 மணிக்கு
திருக்குட நன்னீராட்டு சிறப்புப் பேரவை.

விழாத் தலைவர்:

மாண்புமிகு மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்
உயர்திரு R. சௌந்தரராஜன் அவர்கள்

வரவேற்புரை:

உயர்திரு பெ. ராம. ராம. நாதன்
செட்டியார் அவர்கள்

துவக்க உரை:

உயர்திரு உ. சுப்பிரமணியம் I. A .S.

(ஆணையர் இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை)

திருப்பணியாளர்கட்கு வாழ்த்துரை:

உயர்திரு S. சௌரிராஜு அய்யங்கார் அவர்கள்

(அ. தி. மு. க. பொதுக்குழு உறுப்பினர்)

தலைவர், அறநிலைய குழு, மன்னார்குடி..

வாழ்த்துரை:

உயர்திரு இரா. தண்டபாணி B. Sc., B.L. அவர்கள்

(துணை ஆணையர் இ. ச. அ.ஆ. நாகை)

உயர்திரு த. அர்சுநட்டன் அவர்கள்

(உதவி ஆணையர் இ. ச. அ. ஆ. நாகை)

உயர்திரு L. சோமு அவர்கள்

உயர்திரு "சோமலெ" அவர்கள்

பாராட்டுக்கு நன்றிஉரை:

உயர்திரு பெ. ராம. லெ. ராக. அழகப்பன் அவர்கள்

நன்றி உரை:

உயர்திரு S. K. மீனாட்சிசுந்தரம் அவர்கள்

(செயல் அலுவலர்)

காலை 11-25 வேடம்பூர் நம்பர் கோவில் திருக்குட நன்னீராட்டு.

மாலை 3-00 மணிக்கு மகா அபிஷேகம்"

3-30 மணிக்கு

"பட்டிமன்றம்"

தலைப்பு

பெரியபுராணத்தில் திருத்தொண்டில் மிஞ்சி நிற்பவர்

**ஆடவரா?**

**மகளிரா?**

நடுவர்: இரா. ராதாகிருஷ்ணன் **M. A.**

ஆடவரே — மகளிரே

சோ. சத்தியசீலன் **M. A.** — திரு சொ. சொ. மீ. சுந்தரம் **M. Com.**

சுப. கதிரேசன் **M. A.** — இராசம் மரகதம் **M. A.**

கவிஞர் அரு. நாகப்பன் — புலவர் தி.சு. மலையப்பன்

மாலை 6-00 மணிக்கு
ஏழிசை வேந்தன்
**திருமெய்ஞானம் T. P. நடராஜசுந்தரம் & பார்ட்டி**
நாதஸ்வரம்
**திருச்சேறை T. G. முத்துக்குமாரசாமி**
ஸ்பெஷல் தவுல்

இரவு 9-00 மணிக்கு
சினிமா பின்னணி "பத்திரகாளி" புகழ்
**சென்னை திருமதி M. R. விஜயா அண்டு பார்ட்டியாரால்**
இன்னிசைக் கச்சேரி நடைபெறும்.

11 மணிக்கு பஞ்சமூர்த்திகள் திருவுலா காட்சி நடைபெறும்
பிரதி தினமும் திருப்பனந்தாள் காசிமடம்
ஓதுவார்களால் தேவார இன்னிசை நடைபெறும்.

★

அனைவரும் வந்திருந்து விழாவினை
சிறப்பிக்க வேண்டுகிறோம்

இங்ஙனம்

| | |
|---|---|
| பெ. ராம. ராம. மா. | சம்பந்தம் செட்டியார் |
| பெ. ராம. ராம. சித. | ராமன் செட்டியார் |
| பெ. ராம. ராம. சித. | லெட்சுமணன் செட்டியார் |
| பெ. ராம. ராம. லெ. | ராமனுதன் செட்டியார் |
| பெ. ராம. லெ, ராம. | ராமனுதன் செட்டியார் |
| பெ. ராம. ராம. லெ. | சோமசுந்தரம் செட்டியார் (L. சோமு) |
| பெ. ராம. ராம. சித. | நடராஜன் செட்டியார் |
| பெ. ராம. லெ. ராம. | லெட்சுமணன் செட்டியார் |
| பெ. ராம, லெ. ராம. | நடராஜன் செட்டியார் |
| பெ. ராம. ராம. லெ. | மு. கணபதி செட்டியார் |
| பெ. ராம. லெ. ராம. | பெரியகருப்பஞ் செட்டியார் |
| பெ. ராம. ராம. ராம. | மா. காசிச்செட்டியார் |
| பெ. ராம. லெ. ராம. | அழகப்ப செட்டியார் |
| பெ. ராம. ராம. ராம. | சோம. கணேசன் செட்டியார் |
| பெ. ராம. ராம. ராம. | சுப. கணேசன் செட்டியார் |
| பெ. ராம. ராம. லெ. | சோம. லெட்சுமணன் செட்டியார் |
| பெ. ராம. ராம. சித. | ம. ராமன் செட்டியார் |

1) இத்திருத்தலம் தஞ்சை—நாகப்பட்டினம் பஸ் மார்க்கத்தில் கொரடாச்சேரியிலிருந்து மூன்ருவது மைலில் உள்ளது.

2) கும்பகோணம்-கொரடாச்சேரி பஸ் மார்க்கத்தில் குடவாசலிலிருந்து மூன்ருவது மைலில் உள்ளது.

3) 30—6—79 & 1—7—79 ஆகிய இரு தினங்களும் சோழன் போக்குவரத்துக் கழகத்தினரால் ஸ்பெஷல் பஸ்கள் மேற்படி பஸ் மார்க்கங்களிலும் மன்னர்குடியில் இருந்தும் விடப்படுகின்றன.



உ

சிவமயம்

# 1979-ம் ஆண்டு நிகழ்ந்த அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகம்

சித. நடராசன்

அருள்மிகு சௌந்தர நாயகி உடனுறைய வில்வவனநாதர் திருக்கோயில் கற்றிருப்பணி (கல் திருப்பணி) செய்யப்பட்டு முதல் குட நீராட்டு விழா 1937-ஆம் ஆண்டு ஜூன் திங்களில் நடைபெற்றது பின்னர் 42 ஆண்டுகளுக்கு இப்பால் இவ்வாண்டுதான் திருவருள் கூட்டப் பெற்று மறு குட நீராட்டு விழா கண்டது.

தமிழக அரசின் அறநிலையம் பாதுகாப்புத் துறையின் கீழ் இயங்கி வரும் இக் கோயில் அண்மைக் காலத்தில் அரசு இயற்றிய பல் வேறு நிலச்சட்டங்களினால் பாதிக்கப்பட்டு வருவாய் குன்றி அன்றாட பூசை முதலிய நாள் வழிபாட்டுக்கும் சிரமப்பட்டு நடந்து வந்தது. கோயில் பொலிவிழந்தும், கோபுரங்கள் களையிழந்தும் காணப்பட்ட நிலையிலே 1970-ம் ஆண்டு முதலே கோவிலைப் புதுப்பித்து குட நீராட்டு விழா நடத்தி விட வேண்டும் என்று ஊராரும், நிர்வாக அதிகாரியும் முயன்று வந்தனர். எனினும், கோயிலின் பொருளாதார நிலை கருதியோ அல்லது எவ்வாறோ இப் பணி தடைப்பட்டு காலம் நீடித்துச் சென்றது இங்ஙனம் காலம் நீடித்துச் செல்வது கண்டு பெ. ராம குடும்பத்தினரும் மனம் கவல்வராயினர். இறுதியாகக் கடந்த ஆண்டு (1978) மத்தியில் இந்த இரண்டாவது குட நீராட்டுவிழா வையும் தாமே முன்னின்று சிறப் பாகச் செய்துவிடுவது என்று பெ. ராம குடும்பத்தைச் சேர்ந்த கீழ்க்கண்ட திருப்பணிச் செல்வர்கள் திருவுளம் கொண்டனர்.

1. பெ. ராம. ராம ராம மா. சம்பந்தம் செட்டியார்
2. பெ. ராம. ராம. சித. ராமன் செட்டியார்
3. பெ. ராம. ராம சித. லெட்சுமணன் செட்டியார்
4. பெ. ராம. ராம. லெ. ராமனுதன் செட்டியார்
5. பெ. ராம. லெ. ராம ராமனுதன் செட்டியார்
6. பெ. ராம. ராம. லெ. சோமசுந்தரம் செட்டியார்
7. பெ. ராம. ராம. சித. நடராஜன் செட்டியார்
8. பெ ராம. லெ. ராம. லெட்சுமணன் செட்டியார்
9. பெ. ராம. லெ. ராம. நடராசன் செட்டியார்
10. பெ. ராம. ராம. லெ.மு. கணபதி செட்டியார்
11. பெ. ராம. லெ. ராம. பெரியகருப்பன் செட்டியார்
12. பெ. ராம. ராம. ராம. மா. காசி செட்டியார்
13. பெ. ராம. லெ. ராம. அழகப்ப செட்டியார்
14. பெ. ராம. ராம. ராம. சோம. கணேசன் செட்டியார்
15. பெ. ராம. ராம. ராம சுப கணேசன் செட்டியார்
16. பெ. ராம. ராம. லெ. சோம. லெட்சுமணன் செட்டியார்
17. பெ. ராம. ராம. சித. ம. ராமன் செட்டியார்

உடன் பெ. ராம. குடும்பத்தினர் பலமுறை நாகை சென்று

அறநிலையத்துறை துணை ஆணையர் இரா. தண்டபாணி, B.Sc., B.L., அவர்களைக் கண்டு ஷெ குடநீராட்டு விழாச் செய்வதற்கும் ஆணை பெற்று வந்தனர். இரா தண்டபாணி அவர்களும், அவ்வப்போது முகமலர்ச்சியுடன், எங்களுக்கு உற்சாகம் தந்து கொண்டிருந்தார்கள்.

கோயில் முழுவதும் பழுது பார்க்கப்பட்டு கோபுரப் பொம்மைகளும் சீர் செய்யப்பட்டு ஸ்நோசம் அடித்துப் புதுப்பித்து குட நீராட்டு விழா நிகழ்த்த ரூபாய் ஒன்றரை லட்சம் செலவில் திட்டமிடப்பட்டது. இதற்காகும் முழுச்செலவினையும் ஷெ குடும்பத்தினரே ஏற்றுச் செய்வது எனவும் தீர்மானிக்கப்பெற்றது.

கடந்த ஆகஸ்ட் மாதத்தில் மதுரை திரு. மாரியப்ப ஸ்தபதி அவர்கள் மேற்கண்ட பணிகளைச் செவ்வனே செய்து கொடுக்க உடன்பாடு செய்யப்பட்டார்கள். அவருடைய மருமகன் கார்த்திகேயன் ஸ்தபதியும் கடந்த ஒன்பது மாத காலத்தில் ஏற்றுக்கொண்ட பொறுப்புகளின்படி கோபுரப் பொம்மைகளை, முழுவதும் உடைந்திருந்த இடங்களில் புதிய பொம்மைகள் அழகுற அமைத்தும், சிதைந்தவற்றைம் பழுது பார்த்தும் ஸ்நோசம் அடித்து அழகுறச் செய்தார்கள். சுதை வேலைகள் முடிவுற்றதும் கோபுரத்தின் இழந்த களை மீண்டும் மலரத் தொடங்கியது. கோயிலும் பொலிவுடன் காட்சியளித்தது ஷெ ஸ்பதிகளைக் கொண்டு கோயிலின் நந்தவனம் இருந்தஇடத்தில் புதியதாக சௌந்தர மகாலட்சுமி கோயில் ஒன்றும் அமைக்கப் பட்டுள்ளது.

கோபுரக்கலசங்கள் யாவும் பழயன பழுது பார்க்கப்பெற்று புதியனவாக அமைக்கப்பட்டன. சுற்றுமதில் சுவர் விரிசல் கண்டவிடத்தும், காரை பெயர்ந்த இடங்களிலும் பழுதுபார்க்கப்பட்டு மஞ்சட்காவி அடிக்கப்பெற்றது. திருக்கொள்ளம் புதூர் ஊரார்கள் ஒவ்வொருவரும், தம்மால் இயன்ற பணியைச்செய்து எங்களை ஊக்குவித்து உற்சாகம் தந்தார்கள். குறிப்பாக, A. தியாகராஜமுதலியார் அவர்கள், சுவாமிநாத அய்யர் அவர்களின்புதல்வர்களும், ராகவ அய்யங்கார்அவர்களும், A. கோபி அய்யங்கார் அவர்களும் நடராசமுதலியார்-கர்ணம், ரவீந்திரமுதலியார் முத்து முதலியார். பகுமடம் லெ. அ. வயி. அண. வயிரவன் செட்டியார் ராஜமாணிக்கம் செட்டியார் மற்றும் பலரும் இயன்றமட்டும் ஒத்துழைப்பு நல்கி குடநீராட்டு விழாவினைச் சிறக்கச்செய்தனர் உயர்திரு. லெ. அரு அருணாசலம் செட்டியார் அவர்களும் மருந்து சாத்துவதற்கு எங்கள் குடும்பத்தினர்களுடன் மிக உதவியாக இருந்தார்கள். யாகசாலை அமைத்து ஆகம விதிப்படி யாகங்கள் நடத்துவதற்கும் கடகப்பாடி சர்வசாதகம். குருக்கள் அவர்கள் தலைமையில் 100 சிவாச்சாரியார்கள் நியமிக்கப்பட்டனர்.

பெ. ராம குடும்பத்தினரின் நேர்பார்வையின்கீழ் அஷ்டபந்தனம் (மருந்துகள்) விதிப்படி சுமார் பத்தாயிரம் ரூபாய் செலவில் தயாரிக்கப்பட்டு அனைத்து சுவாமிகளுக்கும் சாத்தப்பெற்றது.

சித்தார்த்தி ஆண்டு ஆனி மீ 13உ அனுக்ஞை விக்னேஸ்வர பூசையும் 14உ மாலை வாஸ்து சாந்தியும் யாகபூஜை காலம் ஒன்றும் 15உ யாகபூஜை காலம் இரண்டும் மூன்றும், 16உ யாகபூஜை காலம் நான்கும் ஐந்தும். 17உ காலை 6-7மணி அளவில் யாகபூசை காலம் ஆறும் சிறப்பாக நடைபெற்று திருக்குட நன்னீராட்டு செய்யப் பெற்றது.

மேற் குறிப்பிட்ட ஐந்து நாட்களிலும் மாலையில் இன்னிசைக் கச்சேரிகள் நிகழ்த்தப்பட்டன. இறுதி நாளன்று T.P. நடராஜசுந்தரம்

நாதஸ்வர இசையுடன் பஞ்சமூர்த்திகள் உலா வந்தனர்.

சென்னை M. R. விஜயா பார்ட்டியினரால் இன்னிசைக் கச்சேரியும் நடத்தப்பட்டது.

அன்று காலையில் குடநீராட்டுவிழா முடிந்ததும் அதனைத் தொடர்ந்து நடைபெற்ற சிறப்புப் பேரவைக்கு தமிழக மக்கள் நல்வாழ்வு துறை அமைச்சர் மாண்புமிகு சௌந்தரராஜன் அவர்கள் தலைமையேற்றுச் சிறப்புரை ஆற்றினுர்கள். திரு. பெ. ராம. ராம. சித ராமன் செட்டியார் அவர்கள் அனைவரையும் வரவேற்றுர்கள். திருவாளர்கள் 'சோமலெ' நாகை. அறநிலையத்துறை துணைஆணையர் இரா தண்டபாணி S. சௌரிராஜ அய்யங்கார் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். பெ. ராம. லெ. ராம. அழகப்பன் அவர்கள் நன்றி நவில பேரவைக் கூட்டம் இனிது முடிவுற்றது.

மாலையில் பட்டிமன்றம் திரு. இரா ராதாகிருஷ்ணன், M. A., அவர்களை நடுவராகக் கொண்டு நடைபெற்றது. பெரியபுராணத்தில் திருத்தொண்டில் மிஞ்சி நிற்பவர் ஆடவரா? மகளிரா? என்ற தலைப்பின் கீழ் திருவாளர்கள் கோ. சத்தியசீலன், சொ. சொ. மீ. சுந்தரம், சுப. கதிரேசன், அரு நாகப்பன், தி.சு. மலையப்பன், இராசம்மரகதம் இராஜகோபாலன் ஆகியோர் வாதிட்டனர். இறுதியில் நடுவர் தீர்ப்பு வழங்கி கூட்டத்தினை முடித்து வைத்தார்.

அருள்மிகு வில்வவனநாதர் அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகம் பற்றி தஞ்சை மாவட்டம் மற்றும் செட்டி நாட்டு ஊர்கள் தோறும் போஸ்டர் ஒட்டி விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. நாளேடுகளிலும் விளம்பரம் கொடுக்கப்பட்டிருந்தது.

எனவே குடநீராட்டு விழாவிற்கு இரண்டு தினங்கள் முன்பிருந்தே மக்கள் கூட்டம் கொள்ளப்புதாரில் வந்து கூடத் தொடங்கியது. இன்னிசை கச்சேரிகளும் மக்களைத் தம்பால் ஈர்த்தன.

விழாவிற்கு வரும் பக்தகோடிகளை வரவேற்பதற்கும், அவர்கள் தங்கி இளைப்பாறி உணவருந்திச் செல்வதற்கும் பெ. ராம. விடுதியில் விரிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

ஆண்டுதோறும் இத்தலத்தில்நடந்துவரும் தீபாவளிஓடஉற்சவத்திற்குவரும் பக்தர்களுக்கு இவ்விடுதியில் விழாநிகழும் 3 நாட்களும் பெ. ராம அறக்கட்டளையின் சார்பில் சிறப்பாக விருந்தளிக்கப்பட்டு வருகிறது. எனவே, விழா, விசேடங்களுக்கென்றே அமைந்த இம்மாபெரும் விடுதியில் கும்பாபிஷேகம் காணக் களி மீதூர்ந்து வரும் அன்பர்கள் மிகவும் வசதியுடன் தங்கியிருந்து இசைநிகழ்ச்சிகள், யாகசாலைப்பூஜைகள் ஆகியனவற்றில் பூரணமாகக் கலந்து கொள்ள முடிந்தது.

மக்கள் கூட்டம் கூடி பக்தி மிகுந்து, மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைக்கும்போது விருந்தின்றி விழா அமையுமோ? நகரத்தார்களின் விருந்தோம்பும் பண்புக்கு கேட்கவும் வேண்டுமோ?

செட்டிநாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட தேர்ந்த சமையல் காரர்கள் நூற்றுவரைக் கொண்டு தயாரிக்கப்பட்ட அறுசுவை உண்டி நான்கு வேளையும் நன்கு பரிமாறப்பட்டது. சிறப்பு விசாரணையாளர்க ளாக நச்சாந்துப்பட்டி திருவாளர்கள் பெரி. பெ. ராமனாதன்செட்டியார், வீர. மு. சுப்பையாசெட்டியார், முரு. லெ. று. உமையாள் சுந்தரம், கி. மாணிக்கம் செட்டியார், சுப மா. சுப்பு, R. M. குமரப்பன் அவர்கள் ஆ.வெ. குமரப்பசெட்டியார் ஆகியோர் நான்கு தினம் முன்பே வந்திருந்து விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை முன்னின்று கவனித்தனர். உணவு ஆக்கியதும் விருந்து பரிமாறப்பட்டவிதமும் விசாரணையாளர்களின் திற மைக்குச் சான்று பகர்ந்து நின்றன. நன்னீராட்டு விழா தினத்தன்று மட்டும் காலைச் சிற்றுண்டி சுமார் மூவாயிரம் பேருக்கு அளிக்கப்பட்டது. மதிய உணவும் கைதேர்ந்த பிராமணர்களைக் கொண்டு உருவாக்கி வழங்கப்பட்டது.

அருள்மிகு சௌந்தரநாயகி வில்வாரண்யேஸ்வர் குடநீராட்டு விழாக் காண மக்கள் அதிகாலையிலிருந்தே ஆங்காங்கு அணி அணியாகத் திரண்டிருந்தனர். கோயிலின் மேல் தளத்தின்மீதும் சுற்றுப் பிரகாரங் களிலும், நான்கு வீதிகளிலும், குளத்தின் கரையிலும் எங்கு பார்த்தா லும் மக்கள் வெள்ளமே காணப்பட்டது. யாகசாலை பூர்ணாகுதி நடந்து சரியாகக் காலை 6 மணிக்கெல்லாம் சிவாச்சாரியார்கள் கும்போதக நீர் நிறைந்த திருக்குடங்களைக் கையிலேந்தி ஆலயத்தினை ஒருமுறை பிரகா ரம் வந்து மேல் கோபுரநிலைக்குச் சென்று விட்டனர். சரியாகக் காலை 6-55 மணிக்கு பல்லாயிரக்கணக்கான மக்கள் கைதொழுது அண்ணாந்து நோக்கிக் கண்டுகளிக்கக் குட நீராட்டுவிழா அபிஷேகம் செய்யப்பெற்றது.

அடுத்து காலை உணவு முடித்த ஜனக்கூட்டம் 8-30 மணிக்குத் தொடங்கிய சிறப்புப் பேரவையில் கலந்து முழுநேரமும் இருந்து சிறப்பித் தனர்.

திருஞானசம்பந்தப்பெருமான் வந்து தங்கிய வெட்டாற்றின் மறு கரையில் உள்ள வேடம்பூர் நம்பர் கோயிலும் புதுப்பிக்கப் பெற்று அன்றைய தினமே பகல் 11-55 மணிக்கு குட நீராட்டுவிழா நடைபெற் றது. அதற்கு வேடம்பூர் ஊராரும், விரையாச்சிலை பெரி மெ வடிவேல் செட்டியாரவர்களும், டியார் தம்பிகள் பழநியப்ப செட்டியார், அடைக் கலவன் செட்டியாரவர்களும் பெரும் ஒத்துழைப்பை நல்கினர்.

காலை 10-30 மணிக்குச் சிறப்புப்பேரவை முடிந்து விடவே அனைத்து மக்களும் வெட்டாற்றை நோக்கி நடக்க ஆரம்பித்தனர். ஆறின் அக்கரை ஓரமாகவே நம்பர்கோயிலின் கரையை அணைந்தே நீர்ப் பிரவாகம் சென்று கொண்டிருந்ததால் மத்தியில் உள்ள மணல்வெளிப் பிரதேசம் மக்கள் கூட்டம் நின்று காணக் கன கச்சிதமான இடமாக விளங்கியது. அம்மணல் வெளியில் பகலவன் சுட்டெரிக்கும் உச்சி வேளை யில் மக்கள் கூட்டம் ஒரு சேரத் திரண்டு நின்று நம்பர் சுவாமியின் திருக் குட நன்னீராட்டலைக் கண்டு களிப்பெய்தியது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

——→⋇←——

உ

சிவமயம்

# திருக்குட நன்னீராட்டு விழாவில்

## மாண்புமிகு மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்
## உயர்திரு R. சௌந்தரராஜன் அவர்கள்
## நிகழ்த்திய உரை



ஒவ்வொரு ஆலயங்களையும் பார்க்கின்ற நேரத்தில்தான் நம்முடைய பண்டைய கலாச்சாரங்கள், சமுதாயம் எப்படி வளர்ந்தது, கலை உணர்வு என்ன? கட்டிடக் கலையில் திறமை என்ன என்பதையெல்லாம் இதுபோன்ற ஆலயங்கள்தான் நமக்குப் பறைசாற்றிக்கொண்டு இருக்கின்றன.

நான் சில தினங்களுக்கு முன்னாலே வைணவத் தலங்களிலே தலைமைத் தலமாக இருக்கின்ற திருவரங்கத்தில் இவ்வளவு காலமாக மொட்டைக் கோபுரமாக நின்று கொண்டிருந்த ராஜகோபுரத்திலே மிகப் பெரிய கோபுரமாக எழுப்புவதற்கான திட்டத்தைத் தீட்டி பல ஆண்டு காலமாக அரசினர் ஏற்றுக் கொள்ளப்படாத ஒன்று இன்றைக்குப் புரட்சித்தலைவர் ஆட்சியிலே ஏற்றுக் கொள்ளப்பட்டு அதற்கான துவக்க விழாவினை துவக்கி வைக்கின்ற வாய்ப்பினை பெற்று அந்த ராஜகோபுரத்தின் மேலே சென்று பார்க்கின்ற வாய்ப்பையும் நான் பெற்றேன். அந்தக் கோபுரத்தை எப்படிக் கட்டினார்கள். இவ்வளவு பெரிய கற்களை அந்தக் கோபுரத்தின்மீது எம்படிக் கொண்டு போனார்கள் அந்தக் காலத்தில் கிரேன் என்ற ஒன்று கூட இல்லை. இரண்டு பக்கத்திலும் காவிரியும் கொள்ளிடமும் கரைபுரண்டு ஓடுகின்ற நதி எடுத்து வருவதற்கு மிகப்பெரிய கிரேன்களெல்லாம் இல்லையானாலும் அவ்வளவு பெரிய கற்களை — சுமார் 12½ அடி அகலம், 80 அடி நீளம் 13 அடி உயரமுள்ள கல்லை கொண்டு போயிருக்கிறார்கள். அதுபோல ஒரு கல்லல்ல; கிட்டத்தட்ட 33 கல்லைக் கொண்டு போயிருக்கிறார்கள். ஒரு பின்னப்படாமல் கொஞ்சங்கூடக் காயப்படாமல், ஏற்றி இருக்கிறார்கள் என்று சொன்னால் அது முழுக்க முழுக்க உழைக்கும் கரங்களினுடைய திறமை என்பதனை நம்மாலே உணரமுடிகிறது.

ஆகவே ஆலயம் கட்டுவது என்று சொன்னால் ஆலயம் நடப்பது என்று சொன்னால்என்னைப் பொறுத்தவரை நான் ஏற்றுக்கொள்வதெல்லாம் அங்கிருக்கிறஆண்டவனுக்கு உணவு தருவதைவிட வேலையில்லாத பேருக்கு நாம்வேலை தருகிறோம் அந்தக் குடும்பத்தை வாழ வைக்கிறோம் என்பதுதான் அதனுடைய பொருளாகும். ஆகவே அந்த வகையில் ஒரு ஊரில் ஒரு ஆலயத் திருப்பணி துவங்குகின்றதென்று சொன்னால் பல குடும்பங்கள் அதை நம்பி பிழைக்க மட்டுமல்லாமல் கவலையில்லாமல் வாழ்வதற்கான வழிவகைகளை அவர்கள் பெறுகிறார்கள். அதோடுயில்லாமல் நம்முடைய ஆசாரங்களை நாம் காத்துக்கொள்கின்ற வழிவகைகளை இன்றைக்கு நான் வருகின்ற நேரத்திலே சொன்னார்கள். மதுரையிலே மதுரை மீனாட்சி அம்மனுடைய ஆலயத்தின் கோபுரத்திலே வைக்கப்பட்டு இருக்கின்ற அந்தக் கல்தான் இந்தக் கோவிலில் இருக்கின்ற கோபுரத்திலே வேலை செய்திருக்கிறார்கள்.

யாருடைய காலத்திலே யார் அந்தக் கோபுரத்தினுடைய சின்ன சின்ன விக்கிரகங்களையெல்லாம் செய்து முடித்தார்களோ அவர்கள்தான் இங்கேயும் செய்திருக்கிறார்கள் என்று சொல்லுகின்றபோது அத்தகைய நம் கலை காலத்தால் மறைந்துவிடாமல் காலத்தால் வளர்ந்துவரவும் நாம் அவர்களை வழிவகுக்க வேண்டுமானால் இதுபோன்ற விழாக்கள் நிறைய நடைபெற்றாக வேண்டும். இந்தக் காலத்திற்கு ஒரு தனிப்பெருமை உண்டு, இல்லையென்று நான் சொல்லிவிட முடியாது.

வைணவத் தலங்கள் 108 என்று சொல்லி திருமங்கை ஆழ்வாருடைய காலத்தில் தான் 108 தெய்வத் தலங்கள் உருவாக்கப்பட்டன என்று வரலாறுகள் இன்றைக்கும் சொல்லிக் கொண்டிருக்கின்றன. அதற்கு முன்னாலே 22 தலங்களாகஇருந்த வைணவத்தலங்கள் இன்றைக்கு 108 திவ்விய தலங்களாக மாறியிருக்கின்றன என்று சொன்னால் அதற்குத் திருமங்கை ஆழ்வாரின் தனிப்பட்ட முயற்சியென்று எடுத்துக் கொள்ள வேண்டும். அதைப்போல சைவத் தலங்கள் எத்தனை என்று கேட்டால் 257 தலங்கள் இருப்பதாக இன்றைக்குச் சொல்லுவார்கள். தேவாரப்பாடல் என்று சம்பந்தர்பாடிய தேவாரத்தின் பாடல் பெற்ற 252 தலங்கள். அத்தலங்களிலே ஒன்றாக இந்தத்திருக்கொள்ளம்புதூர் இடம்பெற்றிருக்கிறது. நான் நீண்ட நேரமாக யோசிக்கிறேன் திருக்கொள்ளம்புதூர் என்பதற்கு என்ன காரணம். இங்கு ஓடுகின்றநதி முள்ளியாறு இன்று வெட்டாறு என்று ஓடிக்கொண்டிருக்கிறது. இது திராவிட சேத்திரமாக இருந்தது என்பதற்கான வரலாறுகள் இருக்கின்றன. இவ்வளவையும் பார்ப்பதற்கு பின்னாலே ஒவ்வொரு யுகத்திலேயும்இதற்குப் பெயர் மாறிக்கொண்

டேயிருந்திருக்கின்றது என்பதையும் எடுத்துச் சொல்கிறார்கள். இது பிரம்ம வனமாக இருந்திருக்கிறது. ஒரு காலத்திலே பிரம்மாவிற்கு இங்கே உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது என்பதை எல்லாம் இன்றைக்கு வரலாறுகளிலே பார்க்கிறோம்.

அதற்கு பின்னாலே அர்ச்சுனனுக்குக் காண்டீபம் தந்தநிலைலே காண்டீபவனம் என்ற பெயரை பெற்றிருக்கிறது. இந்த இரண்டையும் வைத்து நாம் ஒருவாறு உணர்ந்து கொள்ள முடியும். பிரம்மன் கொஞ்சம் அகம்பாவக்காரன். தான் என்றகர்வம் கொண்டவன் அவனுடைய கர்வத்தை அடக்குவதற்காக முருகப் பெருமான் அவதரித்தான் என்பதை நாம் அறிவோம். அத்தகைய கர்வம் கொண்டவர்களை அடக்கிய இடமும் இதுதான். அது எந்தத்துறையில் ஈடுபட்டிருப்பவர்கள் கர்வம் கொண்டவர்களாக இருந்தாலும் கர்வத்திலே அகப்பட்டவர்கள் நிச்சயமாகக் கொல்லப்படுவார்கள் என்பதனை இன்றைக்கு உலகவரலாறு கூறுகிறது என்பதை இந்த நேரத்திலே எடுத்துக்சொல்ல விரும்புகிறேன். அதைப்போலவே அர்ச்சுனனுக்கு காண்டீபம் வருவதற்காக ஒரு இடத்தை இன்பகாரமாக மாற்றியதாகச் சொல்லுகின்றபோது, அதர்மம் தலையெடுக்கும் போது தர்மத்தை நிலை நாட்டி அதர்மத்தை அழிக்கக் காண்டீபத்தை இங்கிருந்துதான் பெற்றான் என்பதைப்போல இன்றைக்கும் அதர்மங்கள் தலையெடுக்கின்ற நேரத்தில், அந்த தர்மத்தை வெல்வதற்காக பலரூபம் உருவாகி, பலசோதனைகளையும் தாங்கியதற்குப் பின்னாலே தான் நாம் காணக்கூடிய வாய்ப்பினைப் பெற்று இருக்கிறோம்.

ஆகவே தர்மம் தழைக்கின்ற இடமும் இந்த இடம் தீமைகள் ஒழிகின்ற இடமும் இந்த இடம். கர்வத்தை ஒடுக்கிக் காட்டுகின்ற இடமும் இந்த இடம். ஆகவே இங்கே இருக்கின்ற ஈசன் எல்லாவற்றிற்கும் ஒன்றாக 'நான்' என்ற உருவத்துடன் இருக்கிறான் என்பதனை என்னாலே உணரமுடிகிறது. ஈசனுடைய பெயராலே இந்த ஊர் இடம் பெறவில்லை. சக்தியின் பெயராலே இடம் பெற்றிருக்கிறது. திரு-எனறால் அழகு. அழகு எனறால் சௌந்தரம். சௌந்தரமாக இருக்கிறது இங்கே இருக்கின்ற அம்பாளுடைய பெயர். அந்த அம்பாள் வந்த இடமாதலினாலே திருக்கொள்ளம்புதூர் என்று இந்த இடம் மாறி இருக்கவேண்டும் என்று கருதுகிறேன். திருஎன்றால் அழகு-சௌந்திரம் என்று எந்தப்பொருளிலே வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். சுந்தர நாயகி இங்கே கொண்ட காரணத்தினால் இங்கே இருக்கின்ற ஈசனை சௌந்தர நாயகிமனம்புகுந்து அவருடைய உள்ளத்திலே இடம் கொண்ட காரணத்தினாலே திரு கொள்ளம்புதூர் என்ற ஒரு பெயரை இந்தத்தலம் கொண்டிருக்க வேண்டும் என்று தமிழறிஞர்கள் எடுத்துச்

சொல்வதைக்கூட இன்றைக்கு நம்மால் பார்க்க முடிகிறது இத்தனைகும் மேலாக இன்றைக்கு நாம் பார்க்கின்றபோது நாம் ஏற்கனவே இந்த ஆலயத்தோடு மட்டுமல்லாமல் திருமாலின் திருமார்பில் வாழும் லட்சுமிக்குக்கூட கோயிலை உருவாக்கிக் கொடுத்திருக்கிறோம் என்று சொன்னார்கள். அரியும் சிவனும் ஒன்று என்று எடுத்துக் காட்டுகின்ற ஒருபான்மை இங்கு ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே இன்னும் சொல்லப்போனால் ஏற்கனவே சௌந்தரநாயகி இருந்த இடத்திலே இன்றைக்கு லட்சுமி இருக்கிறார் என்ற அந்த ஒரு சிறப்பை பார்க்கின்றபோது பார்வதியும் மேலல்ல லட்சுமியும் மேலல்ல என்பதை உணர்த்திக் காட்டுகின்ற தத்துவத்தை சொல்லாமல் சொல்லிக் காட்டுகின்ற சிறப்பை அந்த லட்சுமியின் கோயில் இங்கே கட்டிக்க காட்டியிருக்கிறார்கள். ஆகவே அத்தகைய நல்ல இந்த விழாவில் நீங்கள் இவ்வளவு பேரும் இங்கே வந்து கலந்து கொண்டிருக்கிறீர்கள்'

இந்த ஆலயத்திற்கு நிறைய நிலம் இருக்கிறது. அந்த நிலத்தின் மூலம் வரவேண்டிய வருமானம் குறைந்து போயிருக்கிறது. தமிழகத்தின் ஆலயங்களை எல்லாம் அரசு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று எதிர்க் கட்சியினர் சொன்ன போதெல்லாம் நம்முடைய முதலமைச்சர் அக் கருத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. அறநிலையத் துறை அமைச்சர் R. M. வீரப்பன் அவர்கள் ஒரு கருத்தை வெளியிட்டார்கள். ஆலயத் திற்கு வெளியே இருப்பவர்கள் என்ன சொன்னார்கள் என்று கேட்டார்கள். அப்படி எழுதி வைத்து இறந்துவிட்டவர்களின் எண்ணத்தைச் செயல்ப் படுத்தாமல் இருந்தால் நாம் அவர்களுக்குத் துரோகம் செய்தவர்கள் ஆகி விடுவோம். அவர்கள் எழுத்தை மதிப்பது நமது கலாசாரமும். பண்பாடும் ஆகும்.

..

ஆலயச் சொத்துக்கள் ஆண்டவனுக்கு மட்டும் பயன் படுவதல்ல ஆலயத்தினை நம்பிப் பிழைக்கும் பல்லாயிரம் பேர்களுக்கு வாழ்வளிப்ப தாகும். தமிழக ஆலயங்களில் இன்றைக்கு 50,000 க்கு மேற்பட்ட வர்கள் பணியாற்றித் தங்கள் குடும்பங்களை நடத்தி வருகின்றனர். ஆகவே பல குடும்பங்கள் இதனால் வாழ்வு பெறுவதை யாரும் தடுக்க மாட்டார்கள். அதனை இந்த அரசும் தடை செய்யாது உறுதுணையாக இருந்து வரும்

இத் திருத்தலத்தில் இன்று நடைபெற்ற கும்பாபிடேகத்தை அரசே செய்யட்டும் என்று இருந்திருக்கலாம். ஆனால் நகரத்தார் அப்படி நினைக்கவில்லை. காரணம் அந்தக் காலத்திலே இருந்து இம்மாதிரித் திருப்பணிகளிலே தங்களைப் பெருமளவு ஈடுபடுத்திக் கொண்டவர்கள் நகரத்தார்கள். தமிழகத்தின் பல கோயில்கள் நகரத்தார்களின் நற்பணிகளை இன்றும் சொல்லிக் கொண்டிருக்கின்றன. அந்த அளவிற்கு அவர்கள் கோயில்களை பாடுபட்டு, பொருள் செலவிட்டு, உருவாக்கிப் புதுப்பித்தும் வந்திருக்கின்றார்கள்.

மக்களின் நல்வாழ்விற்கும் கோயிலின் அமைப்பு, வழிபாடு, தூய்மை இவற்றிற்கும் நிறையத் தொடர்பு உண்டு. எனவே மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் என்ற முறையில் இந்த அவையில் கலந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றேன். இந்த நல்ல வாய்ப்பை இவர்கள் எல்லாம் எனக்கு ஏற்படுத்தித் தந்திருக்கின்றார்கள். ஆகவே இவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு உங்களுடைய இந்தத் திருப்பணிக்கு தமிழக அரசு நன்றி சொல்லக் கடமைப் பட்டுள்ளது என்றும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

தேவையானவற்றைத் தமிழக அரசைக் கேட்டுப் பெறுங்கள். அழுத பிள்ளைக்குத்தான் பால் கிடைக்கும். தாமதம் ஏற்பட்டால் மீண்டும் மீண்டும் கேட்டுப் பெற்றுக் கொள்ளுங்கள். இன்றைய அறநிலையத் துறை அமைச்சராக உள்ள திரு. R. M. வீரப்பன் அவர்கள் எவ்வித உதவியும் செய்யத் தயாராய் உள்ளார்கள். எனவே கேட்கவேண்டியதைக் கேட்டுப்பெற வேண்டியதைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

இதுபோன்ற திருப்பணிகளை நிறையச்செய்து இவர்கள் பல்லாண்டு காலம் வாழ வேண்டும். இது இந்தப் பணியின் தொடக்கம் ஆகும். இவ்வகைப்பட்ட பணி தொடர்ந்து வளர்ந்து விரிவடைய வேண்டும். இந்த அரசு உங்களுக்கு என்றும் உறுதுணையாக இருந்துவரும்.

இந்த விழாவில் முக்கியமாகக் கலந்து கொள்ள வேண்டிய திரு. L. சோமு அவர்கள் உடல் நலக்குறைவு ஏற்பட்ட காரணத்தால் வந்து கலந்து கொள்ள இயலவில்லை.

நல்ல உள்ளம் படைத்த அவர்களைப் பார்க்கவும் அவர்களின்இனிய உரையைக் கேட்கவும் முடியவில்லை. என்றாலும் இன்றையிலிருந்து 48 நாட்களில் நடைபெற இருக்கும் மண்டலாபிடேகம் முக்கிய்மான ஒன்றாகும். அந்த நாளிலே அவர் வந்திருந்து இக்குறையைப் போக்குவார் என்று நாம் எல்லோரும் நினைத்துக் கொள்வோம்' இவ் விழாவில் கலந்து கொள்ளும் வாய்ப்பினை அளித்த அனைவருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். அடுத்து இந்த விழாவிற்கு நன்றி கூறும்படி திரு. பெ. ராம. லெ. ராம. அழகப்பன் அவர்களை அழைக்கிறேன்.

சிவமயம்

ஸ்ரீபொய்யாத விநாயக மூர்த்தி துணை

திரு. லெ. ராம. அழகப்பன் அவர்களின்

# நன்றியுரை



இன்றைய தினம் இந்த திருக்கொள்ளம்புதூர் திருக்குட நன்னீராட்டு விழாவிலே தலைமை தாங்கிச் சிறப்பித்துத் தந்த தமிழ்நாடு நல்வாழ்வுத்துறை அமைச்சர் திரு. சௌந்திரராஜன் அவர்களுக்கும் நாகபட்டின இந்து சமய துணை ஆணையர் திரு. தண்டபாணி அவர்களும் எங்களுக்கும் மிகவும் உறுதுணையாக எல்லா உதவிகளையும் செய்து கொடுத்தார்கள், அவர்களுக்கும் எங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்கின்றோம். மற்றும் திருப்பணியாளர்களாகிய பெ. ராம. ராமன் செட்டியார், பெ. ராம. லெட்சுமணன் செட்டியார் ஆகியவர்களுக்கு வாழ்த்துரை வழங்கிய மன்னார்குடி திரு. சௌரிராஜ அய்யங்கார் அவர்களுக்கும், இத்திருக்கோவிலின் செயல் அலுவலர் திரு. மீனாட்சி சுந்தரம் அவர்களுக்கும், மற்றும் இன்றைய தினம் இந்தத் திருக்குட நன்னீராட்டு விழா காணவந்திருந்த பக்தகோடி அனைவர்களுக்கும் எங்கள் பெ. ராம குடும்பத்தினர்கள் சார்பில் நன்றியை தெரிவித்துக்கொள்கின்றேன்.



# நகரத்தார் வரலாறும்
# ஏழு நகரத்தார் குழுவ நாடகமும்



குறவஞ்சி இலக்கிய வளர்ச்சிக்குப் பின்னர் எழுந்த ஒரு இலக்கிய வகை குழுவ நாடகம் ஆகும். இன்று, நமக்குத் தெரியவரும் குழுவ நாடகங்கள் நான்கு. அவை :

1. சின்னமகிபன் குழுவ நாடகம்.
2. அருணைசலம் செட்டியார் பேரில் குழுவ நாடகம்.
3. கோட்டூர் நயினுர் பேரில் குழுவ நாடகம்.
4. ஏழு நகரத்தார் பேரில் குழுவ நாடகம்.

இந்நான்கும் செட்டிநாட்டுப் பின்னணியில் எழுந்தனவாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். நகரத்தார் குழுவ நாடகம் மற்ற குழுவ நாடகங்களினின்றும் அமைப்பில் பெரிதும் மாறுபட்டிருக்கின்றது. எனவே இக்கட்டுரை, இக்குழுவ நாடக அறிமுகமாக அமைகிறது.

இக்கட்டுரையினைப் படித்துப் பார்த்துத் திருத்தங்கள் கூறி உதவிய பேராசிரியர் முத்துச் சண்முகம் அவர்களுக்கும், நகரத்தார் பற்றிய பல செய்திகளைக் கூறி உதவிய பேராசிரியர் தமிழண்ணல் அவர்களுக்கும் யான் நன்றியுடையேன்.

1. இக்குழுவ நாடகம் சென்னை உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் உள்ளது. இதனைப் பற்றிய குறிப்பு வேறு எந்த நூலிலும் காணப்படவில்லை.



### ஏழு நகரத்தார் ஒன்பது கோயில் :-

சோழ நாட்டில் வாழ்ந்து வந்த நகரத்தார், சோழ மன்னனின் கொடுமையால் அந்நாட்டைத் துறந்து, பாண்டிய நாட்டையடைந்து, ஏழு பிரிவினராக பிரிந்து, ஒவ்வொருவரும் ஒரு கோயிலைத் தமக்குரியதாக கொண்டு வாழ்ந்தனர் என்பது நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு

நுவலும் செய்தி. இவருள் திருவேட்டுடையார் என்னும் அண்ணன் தம்பியர் இருவர் பிரிந்து மூத்தவர் இரணியூரைத் தன் கோவிலாகவும், இளையவர் பிள்ளையார்பட்டியைத் தன் கோயிலாகவும் கொண்டனர் என்றும் நகரத்தார் வரலாறு கூறுகின்றது. ஏழு நகரத்தார் என்று பெயர் கொண்ட போதிலும், அவர்களுக்குரிய கோயில்கள் ஒன்பது அவ்வொன்பது கோயில்களும் அதன் உட்பிரிவுகளும் ஏழு நகரத்தார் குழுவ நாடகத்தில் கூறப்பட்டுள்ளன:

## ஒன்பது கோயில்களும், எழுந்தருளிய தெய்வங்களும்:

ஏழு நகரத்தார் குழுவ நாடகம், மற்ற இலக்கியங்களைப் போல விநாயகர் காப்புடனே தொடங்குகின்றது. முருகேசர், மால், நாமகள் ஆகியோர் மீதும் காப்புகள் பாடப்படுகின்றது. பின்னர், ஒன்பது கோயிலுக்குரிய தெய்வங்கள் மீதும் காப்புப் பாடப்படுகின்றது. சைவ மதத்தை மட்டுமே பின்பற்றக் கூடியவர்கள் நகரத்தார் என்பதற்கேற்ப, அத்தரத்துக் கடவுளர் சிவனும், அம்மையுமாகவே இருக்கின்றனர். பாடல் ஓசைக் கேற்ப அக்கடவுளரின் பெயர்கள் சற்று மாறுபட்டுள்ளன

உ. அ. இராமநாதன் செட்டியார், நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, முன்னுரை & பக்கம் 4-6.
இக் குறிப்பு 'நகரத்தார் சரித்திரம்' பக்கம் 16-19 என்னும் நூலிலும் காணப்படுகின்றது.

3. நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு பக்கம் 18.

4. மு. நா. பக்கம் 48, pAMELA G. PRICE, THE POLITICAL CULTURE OF A MERCHANT BANKER CASE :. A HISTORIAN'S VIEW, FOLKLORE SEMINAR PAPERS, page 121.



| கோவில் பெயர் | கோவிலுள்ள சுவாமி-அம்மன் பெயர் | குழுவ நாடகத்திலுள்ள சுவாமி-அம்மன் பெயர் |
|---|---|---|
| இளையாத்தங்குடி | கைலாசநாதர் நித்ய கல்யாணி | கைலாசநாதர் நித்தியவான் நகையம்மன் |
| மாத்தூர் | ஐஞ்ஞாற்றீசர் பெரியநாயகி | ஐந்நூற்றிநாதர் பெரியவள் |
| வைரவன் கோயில் | வளரொளிநாதர் வடிவுடையம்மை | வளரொளியீசர் வடிவுள்ளமங்கை |
| இரணியூர் | ஆட்கொண்டநாதர் சிவபுரந்தேவி | ஆட்கொண்டநாயகர் சிவபுரந்தரி |
| பிள்ளையார்பட்டி | திருவீசர், மருதீசர் சிவகாமவல்லி, வாடாமலர்மங்கை | — — |
| நியமம் | செயங்கொண்டசோழீசர் சவுந்தரநாயகி | செயங்கொண்ட சோழீசர் சவுந்தரி |
| இலுப்பைக்குடி | தான்தோன்றியீசர் வடிவுள்ளமங்கை | தான்தோன்றிநாதர் வடிவுள்ளமங்கை |
| சூரைக்குடி | தேசிநாயகர் ஆவுடையம்மன் | தேசிநாயகர் ஆவுடையம்மன் |
| வேலங்குடி | கண்டீசர் காமாட்சியம்மை | கண்டீசர் காமாட்சியம்மை |

இத்தெய்வங்கள் தவிர, வயிரவன்பட்டி செவ்வடுகேசர் பிள்ளையார்பட்டி கற்பகப் பிள்ளையார், வேலங்குடி 'உத்ராபதியீசர் ஆகியோர் மீதும் காப்புப் பாடப்பெற்றுள்ளது.

## உட்பிரிவுகள்:-

இளையாத்தங்குடி, மாத்தூர், வயிரவன்பட்டி ஆகிய மூன்று கோயில்களுக்கும் முறையே, ஏழு, ஏழு, மூன்று உட்பிரிவுகள் உள்ளன. இவை நகரத்தார் சிறப்புச் சொல்லும் அகவலில் வெளிப்படுகின்றன.

1. இளையாத்தங்குடிக்குரிய உட்பிரிவு ஊர்கள்:-

1. ஒக்கூர், 2. பெருமாலூர், 3. கிண்கிணிக்கூர், 4. பட்டணசாமி, 5. செந்தூர், 6. வாசற்குடி, 7. சிறுசேற்றூர்.

மாத்தூர்க்குரிய உட்பிரிவுகள் :

1. மண்ணூர், 2. உறையூர், 3. மணலூர், 4. குளத்தூர், 5. கண்ணூர், 6. அரும்பாக்கூர், 7. கருப்பூர்.

வைரவன் கோவிலுக்குரிய மூன்று உட்பிரிவுகள் : 1. சிறுகுளத்தூர் 2. கழனிவாசல் 3. மருதேந்திரபுரம்.

## நகரத்தார் பெருமை :

நகரத்தாரின் சிறப்பு, அவர் தம் கல்வி, கொடை, வாய்மை அறம் போன்ற பண்புகள் குழுவ நாடக அகவல் விருத்தத்தில் வெளியாகின்றன. நகரத்தார் 'கல்வி அறிந்த விவேகர்'; சொன்னசொல் தவறுத நேர்மையானவர்; 'காய்கதிர்மதி வட்காயினும் சொன்ன வாய்மை தப்பாமல் வளர் கணிகேசர்' என்பதறல் இதையறியலாம். செந்தமிழ்ப்பற்று மிக்கவர் செந்தமிழ்ப் புலவர்க்குப் பரிசும், பொன்னும், ஆடையணிகலன்களும் அளிக்கும் வள்ளன்மை மிக்கவர்; 'மாணிக்கம் பிச்சை வழங்கக் கூடிய செல்வச் செழிப்புடையவர்; கம்பனூர் கோயில் கனகோபுரத்தைச் செம்பொற்றகட்டாற் சிறப்புடன் வேய்ந்தோர்' பாண்டிய நாட்டில் பல அறச்செயல்கள் புரிந்தவர் :

---

பூவாலயம் புனல்நிறை வானிகள்
வற்றுத வூருணி மாருமலர்க்கா
தண்ணீர்க் காவணஞ் சாலைகள் கிணறு

அமைத்தவர் என்பதனால், நகரத்தாரின் பெருமை புலனாகின்றது பாண்டிய மன்னனே, தன்நாட்டில் சிறந்த குடிகள் வேண்டும் என்பதற்காகச் சோழ நாடு சென்று அழைக்க, நகரத்தார் பாண்டிய நாடு வந்தனர் என்னும் கதையும் அவர்தம் பெருமையினை விளக்குகிறது. மூவேந்தருக்கு முடி புனைந்திட்டோர் என்பதனால் மன்னருக்கு முடி புனையும் சிறப்புப் பெற்றிருந்தமையும் புலனாகிறது. நகரத்தார் சரித்திரத்திலும், இச் செய்தி சொல்லப் பெற்றிருக்கின்றது.

## நகரத்தார் பற்றிய பழங்கதைகள் :-

நகரத்தார் பற்றிய பழங்கதைகள் பல இந்நூலில் கூறப்பட்டுள்ளன. சோழ மன்னனின் கொடுமைக்கு ஆளாயினர் நகரத்தார். ஒரு முறை காவிரி பெருக்கெடுத்து ஓடும்பொழுது, மண் அள்ளிப்போடுமாறு அரசர் கட்டளையிட, வணிகர்கள் அரசன் ஆணைப்படி நடவாமல், தங்கள் வியாபாரப் மண்டகசாலைகளிலுள்ள பஞ்சுப் பொதிகளால் தண்ணீரை உடைத்துத் தங்கள் கூறுகளைப் பூர்த்தி செய்தனர் என்பது வரலாறு, இஃது இங்கு.

'மிஞ்சு காவேரி வெள்ள நீரதனைப்
பஞ்சுப் பொதியா பருவனை யணைந்தோர்'

எனக் குறிக்கப்படுகின்றது.

அதுகண்ட அரசன் பெருங்கோபமும், பொருமையும் கொண்டு, அவ்வாணிகர்களை அரண்மனைக்கழைத்துத் தன்னுடைய பட்டத்து யானையை நிறுத்து நிறை சொல்லுங்கள் பார்ப்போம்' என்று கேட்க அவர்கள் தம் கண்ணாலேயே யானையை நிறுத்துச் சொன்னார் என்னும் செய்தி

'ஆணிக்கையா மதயானையை நிறுத்தோர்'

எனக் குறிக்கப்படுகின்றது. அவ்வாறே மோசமான தங்கத் தகட்டில் மாற்றுச் சொல்லுமாறு அரசன் வினவ, அவர்களும்

5. நகரத்தார் சரித்திரம், பக்கம் 13

6. மு. நூ. பக்கம் 10

7. நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, பக்கம் 11.

மேற்பூச்சுத் தங்கத்தின் மாற்றுச் சொன்னார்கள் என்னும் செய்தியையும் இந்நூலில் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். பிறிதொரு முறை கிணற்றிலிருந்து நீர் இறைக்கப் போதுமான கயிறு கொடுக்கவில்லை அரசன். இவ் வணிகர்களோ, தங்கச் சவடியையே (காதில் அணியக்கூடிய வட்டமான அணிகலன்) தாம்பாக்கி நீர் இறைத்த செய்தியும் இந் நூலில் விளக்கம் பெற்றுள்ளது. மேலும், செந்தமிழ் வல்லமைக்காகத் தாம் தேடிய ,கன திரவியத்தைக் கடல் தனிலெறிந்துமினைதனில் வலிய வரவழைத்திட்ட சிறப்பு மிக்கவர் ஏழு நகரத்தார் என்றும், வடநாட்டுப் புலவன் (ஏமநாதன்) ஒருவனை

'மதுரையில் கடிகை வாணர்களுடனே
எதிர்வாது பாடி இசைபெற வென்றோர்'

## உபதேசம் பெறுதல்:-

நகரத்தார் குரு ஒருவரிடம் உபதேசம் பெறும் மரபு உண்டு. முன்பு ஆண்களுக்கு மட்டும் உபதேசம் அளிக்கப் பெற்றது என்பதும் பின்னர் பெண்களுக்கும் உபதேசம் அளிக்கப் பெறுகின்றது என்பதும், இருவருக்கும் வெவ்வேறு இடங்களில் உபதேசம் அளிக்கப்படுகின்றது என்பதும் நகரத்தார் வழக்கில் காணப்படுவதொன்று ஆகும்.' அதனைக் குறிக்கும் வகையில், தம் குருவையும் போற்றுகின்றனர். இந்நூலில்

சதுமறையாறு சாத்திர முணர்ந்து
கதிபெறு வேள்விக் கரும முடித்த
யோகி மெஞ்ஞானி உயிர்பிர்மச்சாரி
ஆகிய பாண்டியநாட்டாசான் பதமும்
வேத வித்தாகி விளங்கு மெஞ்ஞானி
ஆதி மெய்ப்பொருளை அறிந்தருள்யோகி
திருப்புனவைகுரு தேசிகன் பதமும்
விருப்பமாய்ப் போற்றி விளங்க எந்நாளும்
பகருபதேசம் பத்தியாய்ப் பூசித்து'

எனவரும் பகுதியால் இதனை அறியலாம்.

## முடிவுரை:-

ஏழு நகரத்தார் குழுவ நாடகம் என்னும் இந்நூலில் நகரத்தாரின் வரலாற்றினையும் அவர்தம் சிறப்பினையும் தெரிவிக்கும் ஒன்று என்பதே இதனின்றும் பெறக்கூடிய செய்தியாகும்.

8. டாக்டர் தமிழண்ணல் கலந்துரையாடலின் போது கூறியது.

# கோயில் திருப்பணி

நகரத்தார்கள் திருப்பணி செய்திருக்கும் கோயில்கள் பெரும்பாலும் சமய குரவர்களால் பாடப் பெற்றவையாகவே இருக்கும்.

நற்சாந்துபட்டி பெ.ராம. குடும்பத்தார் ஒரு கோயில் திருப்பணி செய்ய வேண்டுமென்று நினைத்தபோது புதுக்கோட்டை மஹாராஜா, தம் ஆட்சிக்குட்பட்ட ஓரிரு கோயில்களில் திருப்பணி செய்ய, இக்குடும்பத்தார்க்கு இசைவு ஆணை வழங்கினர். ஆனால் அவை பாடல் பெற்ற கோயிலாக இல்லை என்ற காரணத்தால், அவர்கள் அதில் ஆர்வம் காட்டவில்லை. பின்னர், தஞ்சை மாவட்டத்தில் பாடல் பெற்ற கோவில்களுள் திருப்பணி செய்யவேண்டிய நிலையிலுள்ள கோயில் எது என்று அலைந்து தேடித்துருவி, திருக்கொள்ளம்புதூர் கோயிலைத் தேர்ந்தெடுத்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஹிந்தி மொழி வழங்கும் காசி மாநகரில் விசுவநாதர் கோயிலில் நாளும் தேவாரம் ஒலிக்க ஏற்பாடு செய்திருப்பவர்கள் நகரத்தார்கள் ஆவர்.

கன்னட மொழி பேசப்படும் பெங்களூரில் ஸ்ரீதிருச்சி சுவாமிகள் அமைத்துள்ள ஸ்ரீ இராஜ ராஜேஸ்வரி அம்பாள் திருக்கோயிலில் நாள் தோறும் தேவாரம் பாடுவதற்காக ஓதுவார்கள் நியமிக்கப் பெற்றுள்ளனர்

தேவாரப் பண்கள் இன்ன இன்ன என்று முடிவு செய்த பெருமையும் நகரத்தார்களின் ஆதரவால் செட்டிநாட்டரசர் அவர்கள் சிறப்பாக நடத்திவரும் தமிழ் இசைச் சங்கத்தைச் சேரும்.

தமிழகமெங்கும் தேவாரப் பாடசாலைகளை அமைத்து, மறைந்து வந்த திருமுறைகளுக்குப் புத்துயிர் அளித்தவர்கள் நகரத்தார்களே அன்றி வேறு யார்?

இன்றும் ஏராளமான திருக்கோயில் குடமுழுக்கு விழாக்களில், திருமுறைகளை ஓதுவதற்கு ஏற்பாடு செய்து வருபவர்கள் பாகனேரி திருமுறைச்செல்வர் திரு. இராம. முத்துப்பழநியப்ப செட்டியார் அவர்கள் ஆவார்கள்.

கடல்கடந்த நாடுகளிலும் நகரத்தார்கள் தேவாரத்தைப் பரப்பியுள்ளனர்.

திருவாசக மடம் என்பது செட்டிநாட்டில் மட்டுமே காணக் கூடிய ஒன்று.

பலவான்குடியில் தோன்றிய சிவனடியார் திருக்கூட்டமும் மேலைச் சிவபுரியில் நிறுவப்பெற்ற சன்மார்க்க சபையும் செய்துள்ள ஏராளமான சிவப்பணிகளை விவரிக்க இக்கட்டுரை இடந்தராது.

சில கோயில்களின் திருப்பணியை நகரத்தாரில் ஒரு குடும்பத்தார் மட்டுமே செய்துள்ளனர். ஆனால் ஒரு குடும்பத்தாரின் மேற்பார்வையில் கோயில் திருப்பணிகள் நகரத்தார் அனைவரின் சார்பாகவும் நடந்திருப்பதைப் பல தலங்களில் பார்க்கிறோம். எடுத்துக்காட்டாக இராமேசுவரத்தைக் குறிப்பிடலாம். THIRUPPANI FUNDS AT THE HANDS OF AL. AR. FAMILY என்று கோர்ட்டு ஆதாரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. நகரத்தார் அனைவரும் இவ்வாறு பல திருப்பணிகளுக்கு உதவியிருக்கின்றனர். கோவிலூர் ஆதீனத்தின் மடாதிபதிகளின் ஆணைக்கு இணங்க, நகரத்தார் சமூகப் பொதுவில் ஏராளமான கோயில்கள் புதுப்பிக்கப் பெற்றுள்ளன.

ஒரு குறிப்பிட்ட குடும்பத்தார் ஒரு திருப்பணியைச் செய்யும்போது அனைத்துச் செலவுகளையும் அவர்களே ஒரே சமயத்தில் செய்ய இயலாதிருக்கலாம். அல்லது, பிறர், தங்கள் பங்கும் இருக்கட்டும் என்று வற்புறுத்தியிருக்கலாம். இத்தகைய சூழ்நிலைகளில் அந்தக் குடும்பத்தாரின் உறவினர்கள், சம்பந்தியார் ஆகியோர் அத்தலத்தில் பசுமடம், நகரவிடுதி, தேவாரப் பாடசாலை, நந்தவனம் முதலியன நிறுவ முன் வருவது மரபு.

தமிழ்நாடு இந்து சமய அறநிலையத்துறையின் ஆணையராக இருந்த திரு. ஏ. உத்தண்டராம பிள்ளை, ஐ. ஏ. எஸ். அவர்கள், பின்வருமாறு கூறியுள்ளார்கள்:-

**19-ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், நகரத்தார் செய்துள்ள திருப்பணிகள் முன்னாள் அரசர்கள் செய்த திருப்பணிகளுக்கும் மேலானவை என்றே சொல்லலாம். இந்தக் கோவில்களை நேரில் கண்டவர்களுக்கு நகரத்தார் செய்துள்ள திருப்பணிகளின் உண்மையான மதிப்பு நன்கு புலனாகும். இந்தத் திருப்பணிகள் செய்யப்படாமலிருந்தால் அநேகத் தலங்கள் மறைந்தோ சிதைந்தோ போயிருக்குமென்று திருப்பணி செய்யப்பெற்ற சிவத்தலங்களைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.**

## பாண்டி நாட்டில்

பாண்டி நாட்டில் நகரத்தார் குடியேறிய போது பாண்டிய அரசர்கள் அவர்களை மனமுவந்து வரவேற்றதோடு 9 ஊர்களில் இருந்த சிவன் கோவில்களை அவர்கள் பொறுப்பில் ஒப்புவித்து அவற்றில் திருவிழா நடத்தும் உரிமை முதலியவற்றை அவர்கட்கு வழங்கியதற்கு கல்வெட்டுகளில் சான்றுகள் உள்ளன. [ஆதாரம்: சென்னைப் பல்கலைக் கழகத்து. பி. எஸ். சுப்பிரமணிய ஐயர் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் 1972. டாக்டர். கே. வி ராமன்-சென்னைப் பல்கலைக்கழக ஜர்னல்-தொகுதி 45-இதழ் 1 பகுதி 1 ஜனவரி 1973, பக்கம் 60-61]

அந்த ஊர்களில் சில வரிகள் விதித்து வசூலிக்கும் உரிமைகளையும் நகரத்தார்க்குப் பாண்டிய மன்னர்கள் வழங்கியிருக்கின்றனர். இவ் உரிமைகள் பிற்காலப் பாண்டியப் பேரரசு அழியும் வரை இருந்து வந்தன.

## முடிவுரை

தமிழ்நாட்டில் சைவசமயம் தழைத்து வருவதற்கு நகரத்தார்கள் செய்திருக்கும் திருப்பணிகளும் தொடர்ந்து அவர்கள் அக்கோவில்களைப் புதுப்பித்து வருவதும் முக்கியக் காரணம் என்பதை யாராலும் மறுக்கவோ மறைக்கவோ இயலாது.

நகரத்தார்க்கு உரிய:

குலதெய்வம் — அம்பாள்
கொடி — சிம்மக்கொடி.
மாலை — சிரகப்பூமாலை
நட்சத்திரம் — அனுஷம்



உ

சிவமயம்

''தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி''

நற்சாந்துபட்டி

# பெ. ராம. குடும்பத்தினருக்கு

சித்தார்த்தி ஆண்டு ஆவணித் திங்கள் முதல் நாள் (17-8-79)

திருக்கொள்ளம்புதூர் பொதுமக்கள் வாசித்தளித்த

# நல் வாழ்த்து மடல்

மங்கலம் பெருக மனை மாட்சி ஓங்க
திங்களஞ் சடைமுடி தாங்கிய முதல்வன்
கங்கை காவிரி கொண்ட நாயகன்
கறை மிடறு உடைய
பிறவா யாக்கைப் பெரியோன் உறையும்
திருவளர் கோயில் திறமுடன் புதுக்கித்
திக்கெட்டும் புகழத் திருக்கொள்ளம்புதூரில்
சித்தார்த்தி ஆண்டு ஆனி பதினேழில் (1—7-1979)
திருக்குட முழுக்காட்டித் திண்மை பெற்றிட்ட
நகரத்தார் மரபில் நற்சாந்து பட்டியில்
நற்றவப்பயனாய் வந்து நாவலந்தீவு வாழ்த்த
நற்பணி பலசெய்து நலமுடன் வாழ்ந்திடும்
**பெ. ராம. குடும்பத்தார்க்கும்;**
மனைமாட்சி ஓங்க மங்காப் புகழ் பெற்ற
**அக்குடும்ப ஆச்சி மார்க்கும்**
என்கடன் பணிசெய்து கிடப்பதே என்ற
முந்தையோர் மறைவழி முறையின் நின்று
கொடுக்கின்ற கரத்தை கும்பிட்டு வாங்கி
இருப்பதைக் கொண்டு ஏற்றம் பலசெய்து
வருவோரெல்லாம் வாழ்த் தொலி எழுப்ப
வகையாம் இறைபணி தன்னைச் செய்யும்
செயல் வீரராம் செயல் அலுவலர்
**திருமிகு மீனாட்சி சுந்தரனார் அவர்கட்கும்**

அவர்களது இறைபணியை அன்புடன் போற்றி
நாளது ஆண்டு சித்தார்த்தியதனில்
ஆவணித் திங்கள் முதல் நாளன்று (17-8-1979) நடைபெற்ற
மண்டலம் போற்றும் மண்டலாபிஷேக விழாவில்.

**கொட்டமே கமழும் கொள்ளம்புதூர் மக்கள்**
மட்டிலா மகிழ்வுடன் அளித்த
**நல் வாழ்த்து மடல்**

இறைபணி செய்து ஏற்றம் பல பெற்ற
**பெ. ராம. அன்பர் பெருங் குடும்பத்தோரே!**
பிறவா யாக்கைப் பெரியோன் கோயில்
மறவா தியாண்டும் மறுவாழ்வு அளித்துத்
திறவாக் கதவினையும் திறக்கச் செய்து
குறையாத் திருப்பணிக் குடும்பத்துடனே
**பெ. ராம. என்னும் பெயர் விளங்கிட**
அற்றம் பார்த்துக் குற்றம் போக்கி
மக்கள் மகிழ மாண்புடன் விளங்க
கண்டோர் வியக்கத் திண்டேர்ச் செய்து
குலம் விளங்கக் கோபுரம் புதுக்கி
மனை விளங்க மண்டபம் கட்டி
வளம் பெருகக் குளம் தொட்டு
வேள்வி பல செய்த வித்தகர் போல
நீளவே திருப்பணி நிறையச் செய்தீர்!
அன்னை காவிரி அன்புடன் வளர்க்கும்
இன்னுயிர்ச் சோழ நன்னாடு அதனில்
முள்ளி பெயர்பெறு வெட்டாறு சூழ்திருக்
கொள்ளம் புதூர்க் கோடி மதிற்கோயில்
வல்லியாம் சௌந்தர நாயகி உடனுறை
வில்லியாம் வில்வவன நாதர் மகிழ்ந்திட
நல்வினை சேர்ந்திட நாதன் கழல் போற்றிப்
பல்விதத் திருப்பணி பற்பல செய்தீர்!
மக்கள் மகிழ்வே மகேசன் மகிழ்வென்று
அக்கறை யுடனே அன்புப் பணிசெய்தீர்!
வாழ்க நும்பணி! வளர்க நும் தொண்டு!
குடியும் குலமும் விளங்கப்
பல்லாண்டு வாழிய! வாழியவே!

**மங்காத புகழ்பெற்ற மங்கையர் திலகங்களே!**
மனைத்தக்க மாண்பும் மாசில் ஈகையும்
வினைத்தக்க செய்கையும் விரும்பு நற்பணியும்
அனைத்தே எம்கொள்கை அரனே எம் மிறைவன்
நினைத்தே முடிப்போம் நேரிய செயலை

ஆடவர் மட்டுமோ அறப்பணி செய்வது
ஈடெமக் கிலே அப் பணியில் என
மங்கையர் திலகங்கள் மங்கள மாகவே
மகா லெட்சுமிக்கோர் மங்காத திருக்கோயில்
உகாந்த காலம் உயர்வாக விளங்கிட
திருக் கொள்ளம்புதூரில் திறமாகத் தான் செய்து
பருக் கற்கள் பலகொண்டு பாங்காகத் தான்முடித்து
மருக் கொன்றை மலர்வேணி மகதேவன் மகிழ்ந்திடவே!
சுருக் கெனவே தந்திட்டீர்! சுகமாக வாழ்ந்திடவே!
வாழி நும் தொண்டு! வாழி நும் அறப்பணி!
பெ. ராம. குடும்பத்துப் பெரியீரே, ஆச்சிமாரே!
விரிகடல் நீர்வேலி விளங்கு பெரு வையத்தில்
வரிவண்டு குழற்கோதை வம்புலாம் மலர்க்கண்ணி
கருவண்ணக் கண்ணன்மகிழ் கமல மலர்த் திருமகளின்
பொருவரிய பொற்பாதம் போற்றி நிதம் வாழ்வீரே!
திருக்கோயில் தன்னில் திறமுடனே பணிசெய்த செயல் வீரரே!
தானாட்சி செய்யும் கோனாட்சி புகழ்மிகு
மீனாட்சி சுந்தரப் பெயரோய் வாழி!
கொட்டமே கமழும் கொள்ளம் புதூரில்
நட்டமாடிய நம்பிரான் தனக்கு
இட்டனை திருக் கோயிற் கற்றளியே!
நீலமணி மிடற்று நிமலன் தாள் பணிந்து
கோல மடவாளொடு குடியும் குலனும் விளங்க
ஆலமர் செல்வன் அருள் புரிகவே!
வாழிய நீவிர் வாழிய பல்லாண்டே!

இங்ஙனம்

தங்கள் அன்பின் நல்,

**ஊர்ப் பொதுமக்கள்,**

திருக்கொள்ளம்புதூர்.







திருக்கொள்ளம்புதூர் அறநிலைய நிர்வாக அதிகாரி
உயர்திரு. S. K. மீனாட்சிசுந்தரம் அவர்கள்
பாராட்டி பேசும் காட்சி

திருக்குட நன்னீராட்டை சிறப்புற நடத்தி வைத்த பெ. ராம.
குடும்பத்தினரை, பாராட்டி திருக்கொள்ளம்புதூர் மக்கள்
உயர் திரு. பெ. ராம. ராம. ராம. மா. சம்மந்தம் செட்டியார்
அவர்கட்கு பொன்னாடை போர்த்தி கௌரவிக்கும் காட்சி.



L. சோமு அவர்களுக்கு, உயர்திரு. A. தியாகராஜ முதலியார் அவர்கள் மாலை அணிவித்தல். அருகிலிருப்பது, அறங்காவலர் உயர்திரு. பெ. ராம. ராம. சித லெட்சுமணன் செட்டியார் அவர்களும் அறங்காவலர் உயர்திரு. பெ ராம. ராம. லெ. ராமநாதன் செட்டியார் அவர்களும்.



திருக்கோவிலுக்கு தினசரி அலுவல்களில் திருத்தொண்டு செய்து பெரும் பேறினை பெற்ற திரு. A. தியாகராஜ முதலியார் அவர்கள்



பெ. ராம. ராம. மா. சம்மந்தன் செட்டியார்
அவர்கட்கு A. தியாகராஜ முதலியார்
அவர்கள் மாலை அணிவித்தல்



பாராட்டுக்கு நன்றி நல்கும்,
பெ. ராம. ராம. சித. இராமன் செட்டியார் அவர்கள்



திரு. சுவாமிநாத உடையார் அவர்களும்,
திரு. A. தியாகராஜ முதலியார் அவர்களும்.



நற்காரியங்கள் நடைபெற தான் என்று முன்னிற்கும்
திரு. ரவீந்திரன் அவர்கள்



திருக்கொள்ளம்புதூர் திருக்குட நன்னீராட்டு விழாவில் கலந்து சிறப்பித்த
திருக்கொள்ளம்புதூர் பொதுமக்களும், நகரத்தார் பெருமக்களும்
பெ. ராம. குடும்பத்தினரும்.



திரு. L சோமு அவர்கள், கோவிலின் வரலாறு பற்றி விரிவான உரை ஆற்றினார்கள்.



திரு. P. நடராஜ முதலியார்
கர்ணம்



திரு. T. V. சோமசுந்தர முதலியார்



திரு. ரவீந்திரனவர்கள் பெ. ராம. குடும்பத்தினரை பாராட்டி வாசித்தளித்த பாராட்டு மடலை திரு. பெ. ராம ராம. மா. சம்பந்தம் செட்டியார் அவர்களிடத்தில் கொடுத்தல்



பாராட்டு விழாவிற்கு தலைமை வகித்த திரு. சுவாமிநாத உடையாரவர்களுக்கு, திரு. A. தியாகராஜ முதலியார் அவர்கள் மாலை அணிவிக்கும் காட்சி



திரு. சுவாமிநாத உடையார் அவர்களின் தலைமை உரை



மண்டலாபிஷேக நன்னாளில் இன்னிசை வழங்கிய
K. வீரமணி குழுவினர்கள்



பாராட்டு மடல் வாசிக்கும் திரு. ரவீந்திரன் அவர்கள்



திரு. L. சோமு அவர்கள், பாராட்டிற்கு நன்றி சொன்னார்கள்.



திரு. L. சோமு அவர்களும், திரு. K. வீரமணி அவர்களும்